Registered No. M. 1500. "NAVASAKTI"

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... ... | 3 | 0 |
| வெளிநாடு—வருட சந்தா ... | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 [illegible]
சில்லரை விளம்பரம் 1 அங். [illegible]
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு க விபவஹு கார்த்திகைமீ உ0உ (5—12—28) புதன்கிழமை பரல் எ

## ஹிந்து சமய நூல்கள்

சுவாமி விவேகானந்தர் அருளியது

நமது சாஸ்திரங்களில் நாம் இரு வகையான உண்மைகளைக் காண்கின்றோம். பரமாத்மா, ஜீவாத்மா, பிரகிருதி முதலிய வற்றைக் குறித்த அநாதியான உண்மைகள் ஒருவகை. அந்தந்தக் கால தேச வர்த்தமானங்களையும், அவற்றிற்குரிய சமூக ஏற்பாடுகளையும் பற்றிய உண்மைகள் இன்னொரு வகை. முதல் வகையைச் சேர்ந்த உண்மைகளை வேதங்களிலும், சாஸ்திரங்களிலும் காண்கிறோம். இரண்டாவது வகை உண்மைகளை ஸ்மிருதிகளிலும், புராணங்களிலும் காண்கிறோம். வேதங்களில் காணும் அநாதியான உண்மைகள் எல்லாக் காலங்களுக்கும் எல்லாத் தேசங்களுக்கும் உரியவை. எனவே, புராணங்கள் ஸ்மிருதிகளில் எந்தப் பகுதியேனும் வேதங்களுடன் முரண்படுமானால் அந்தப் பகுதியைச் சிறிதும் தயங்காமல் தள்ளிவிடவே வேண்டும்.

* * *

ஸ்மிருதிகள் போதிக்கும் தர்மங்களில் மாறுபாடு இருப்பதையும் நாம் பார்க்கிறோம். ஒரு ஸ்மிருதி ஓர் ஆசாரத்தைக் குறிப்பிட்டு இந்த யுகத்தில் அதையே கடைப்பிடிக்க வேண்டுமென்று சொல்கிறது. மற்றொரு ஸ்மிருதி மற்றோர் ஆசாரத்தை இதே விதமாக வலியுறுத்துகிறது. சத்திய யுகத்திற்கு ஓர் ஆசாரமும், கலியுகத்திற்குவேறோர் ஆசாரமும்ஸ்மிருதிகள் விதிக்கின்றன. மனிதனுடைய இயற்கையைஅடிப்படையாகக்கொண்ட அநாதியான உண்மைகள் எப்போதும் மாறுவதில்லையென்பதை அறிய வேண்டும். அவை எல்லாக் காலங்களுக்கும் எல்லாத் தேசங்களுக்கும் உரியவையாகும்; ஆனால் ஸ்மிருதிகள், பெரும்பாலும், குறிப்பிட்ட பிரதேசங்களில் குறிப்பிட்ட காலங்களில் உள்ள நிலைமைகளை யனுசரித்துக் கடமைகளை வகுக்கின்றன. எனவே, காலப் போக்கில் அவை மாறுதலடைதற்குரியவை.

* * *

சமூகத்தின் அற்ப வழக்கம் ஒன்று மாறுவதால் நீங்கள் உங்கள் சமயத்தை இழந்துவிடப் போவதில்லையென்பதை எப்போதும் நினைவில் வைக்க வேண்டும். இந்தச் சமூக வழக்கங்கள் ஏற்கனவே எவ்வளவோ மாறுதல்களுக்குள்ளாயினவேயாகும். இந்தப்பாரத நாட்டிலே மாட்டிறைச்சி தின்னுதவன் பிராமணனாயிருக்க முடியாத காலம் ஒன்று இருந்தது. இல்வாழ்வான் ஒருவனுடைய வீட்டுக்குச்சந்நியாசி, அரசன், அல்லது வேறு பெரிய மனிதன் வருங்கால் ஆடும்,எருதும் கொல்லப்பட்டதாகப்பழைய நூல்களில் படிக்கிறோம். நாம் விவசாயத்தையே முக்கிய ஜீவனோபாயமாகக் கொண்ட சாதியாராதலின், நல்ல எருதுகளைக் கொல்வதால் சாதியே நாசமடையும் என்று அறிந்தபோது, அவ்வழக்கம் நிறுத்தப்பட்டது. பசு வதை கூடாதென்னும் கட்டளையும் பிறந்தது. இப்போது நாம் மிகப்பயங்கரமானவை என்று கருதும் சில வழக்க பழக்கங்கள் அக்காலத்தில் இருந்திருக்கின்றன. நாளடைவில் புதிய ஆசாரங்களுக்கு அவசியம் ஏற்பட்ட போது புதிய சட்டங்கள் பிறந்தன. இவைகளும் காலப் போக்கில் மாறிப் புதிய ஸ்மிருதிகள் ஏற்படும்.

* * *

இந்த ஒரு விஷயத்தை நாம் மறந்து விடவே கூடாது. வேதங்கள் உரைக்கும் அநாதியான உண்மைகள் எந்தக் காலத்திலும் எந்த நிலைமையிலும் ஒருபடித்தாகவேயிருக்கும். அவற்றிற்கு அழிவும், மாறுதலும் இல்லை. ஆனால் ஸ்மிருதிகளுக்கு மாறுதலும் முடிவும் உண்டு. கால வெள்ளத்தின் வேகத்திலே எவ்வளவோ ஸ்மிருதிகள் அடித்துக் கொண்டு போகப்படும். புதிய மகான்கள் தோன்றுவார்கள். அவர்கள் கால நிலைக் கேற்பச் சமூகங்களைப் புனர் நிர்மாணம் செய்வார்கள். புதிய தர்மங்களையும், புதிய ஆசாரங்களையும் ஏற்படுத்துவார்கள். இத்தகைய மாறுதல்களின்றிச் சமூகம் உயிர்வாழ்வதே அரியதாகும்.

* * *

வேதங்களைத் தான் இயற்றியதாக எந்த ஒரு மனிதன் அல்லது ஸ்திரீயும் உரிமை பாராட்ட முடியாது. வேதங்கள் அநாதியான தத்துவங்களின் உறையுள் ஆகும். முனிவர்கள் அத் தத்துவங்களைக் கண்டு பிடித்தார்கள். சில சமயம் அம் முனிவர்களின் பெயர்களும் தரப்படுகின்றன. ஆனால் அவர்களின் பெயர்களுக்கப்பால் அவர்களைப்பற்றி நமக்கு வேறொன்றும் தெரியாது. அவர்கள் யாருடைய புதல்வர்கள், அவர்கள் எங்கே எப்போது பிறந்தார்கள், அவர்கள் செய்த காரியங்கள் யாவை என்பதொன்றும் நாம் அறியோம். இம்மகரிஷிகள் தங்கள் பெயர் விளங்கவேண்டுமென்று கவலை கொண்டார்களில்லை, அவர்கள் தத்துவங்களை உபதேசித்தார்கள். தாங்கள் உபதேசித்த தத்துவங்களுக்குத் தாங்களே உதாரணமாக விளங்க முயன்றார்கள். எனவே, நமது சமயத்திலுள்ள அவதார புருஷர்கள், தீர்க்க தரிசிகள் முதலியோரில் ஒருவரோ, பலரோ சரித்திர பூர்வமானவர்கள் அல்லர் என்று நிரூபிக்கப் பட்டாலும் நமது சமயத்துக்கு அதனால் கேடு எதுவும் விளைவதில்லை. ஏனெனில், நமது சமயம் ஒரு மனிதர் அல்லது சில மனிதர்களை ஆதாரமாகக் கொண்டதன்று; அநாதியான தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டது.

* * *

"ஹிந்து" என்னும் பெயர் பாரஸீகர்கள் சிந்து நதிப் பிரதேசத்தில் வசிப்பவர்களுக்கு அளித்த பெயரே யாகும். எனவே நமது சமயத்தை ஹிந்து சமயம் என்று அழைப்பது சரியாகாது. நமது சமயத்திலுள்ள கணக்கற்ற உட்சமயங்கள் எல்லாவற்றையும் தழுவி நிற்கக் கூடிய வேறு பொதுப் பெயர் ஒன்றைக் கண்டு பிடித்தலும் கஷ்டமே யாகும். எனினும் நமது சமயத்திலுள்ள உட்பிரிவுகள் எல்லாவற்றையும் சேர்ந்தவர்கள் ஒன்றே ஒன்றில் மட்டும் ஒற்றுமை காட்டுகிறார்கள். அதாவது அவர்கள் அனைவரும் வேதங்களை நம்புகிறார்கள். வேதங்களின் மேன்மையை ஒப்புக் கொள்ளாதவன் தான் ஹிந்து என்று சொல்லிக்கொள்ள முடியாதென்பது நிச்சயம். வேதங்கள் கர்மகாண்டம், ஞான காண்டம் என்று இரு பிரிவுகளாக உள்ளன. கர்மகாண்டத்தில் பற்பல யாகங்கள் செய்யும் முறை விவரிக்கப் பட்டிருக்கிறது. இப்பகுதி பெரும்பாலும் இக்காலத்தில் பயன் படுவதில்லை. உபநிஷதங்கள்என்றும், வேதாந்தம் என்றும் சொல்லப்படும் ஞான காண்டத்தையே நமது ஆச்சாரிய புருஷர்கள், தத்துவஞானிகள் முதலியோர் தலைசிறந்த ஆதாரமாகக் கொண்டுள்ளார்கள். அத்வைதிகள், துவைதிகள், விசிஷ்டாத்துவைதிகள் முதலியோர் அனைவரும் தங்கள் கொள்கைகளுக்கு உபநிஷதங்களில் ஆதாரம் காட்ட வேண்டியிருந்தது.

* * *

ஆதலின் இந்நாட்டிலுள்ள நமது சமயத்தினர் அனைவரையும் குறிப்பிடக் கூடிய ஒரே ஒரு பெயர் "வேதாந்தி" என்பதேயாகும். "வேதாந்தம்" "வேதாந்தி" என்னும் சொற்களை நான் இந்தக் கருத்திலேயே எப்போதும் உபயோகிக்கிறேன். துவைதம், விசிஷ்டாத்துவைதம், அத்வைதம் முதலிய எல்லாக் கொள்கைகளுக்கும் வேதாந்தத்தில் இடமுண்டு. ஜெயினர்களையும் புத்தர்களையும் கூட நாம் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருக்கிறோம். ஏனெனில் நன்கு ஆராய்ந்து பார்த்தால் புத்த, ஜைன மதங்களின் உயர்ந்த சன்மார்க்க போதனைகளின் சாரமெல்லாம் உபநிஷதங்களில் அடங்கியிருப்பதைக் காணலாம். பிற்காலத்தில் பல்வேறு இந்தியச் சமயக்கொள்கைகளின் வளர்ச்சிக்கெல்லாம் உபநிஷதங்களே அடிப்படை என்பதையும் அறியலாம்.

* * *

எனவே, இந்த உபநிஷதங்களே நமது வேத நூலாகும். நான் முன்னமே கூறியது போல், வேதங்களுக்கும் பிற்காலத்துப் புராணங்களுக்கும் வேற்றுமை ஏற்படின் புராணங்களைத் தள்ளிவிடவே வேண்டும். ஆனால் காரியாம்சத்தில் நாம் 100க்கு 90 பங்கு புராண சமயத்தினராகவும், 100க்கு 10 பங்கே வேதாந்திகளாகவும் உள்ளோமென்பது உண்மை. நமது சமூகத்தில் வேத நீதியுடன் முற்றும் மாறுபட்ட பழக்க வழக்கங்கள் ஆடிகொண்டிருப்பதைக் காண்கிறோம். வேதத்தில் சிறிதும் ஆதாரம் பெறாத சமயக் கொள்கைகளும் பரவி நிற்றலைப் பார்க்கிறோம். இதுமட்டுமா? வேதங்களிலோ, ஸ்மிருதிகளிலோ, புராணங்களிலோ ஆதாரமில்லாத [illegible] களும் நாட்டில் மலிந்திருக்கின்றன. இவை அந்தந்த இடத்துக்குரிய பழைய வழக்கங்களே யல்லாது வேறில்லை. எனினும், அறியாமையில் மூழ்கிய கிராமத்தான் ஒவ்வொருவனும் தனது உள்ளூர் வழக்கம் ஒன்று [illegible] விட்டால் தன் மதத்துக்கே [illegible] வந்துவிட்டதாக எண்ணிக் [illegible] கிறான். இவ்வறியாமையைத் தெளிவிக்க வேண்டும்.

* * *

நமது சமயம் தனி மனிதர்களைப் பொறுத்த தன்று; தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டதாகும். ஒரு மகான் அல்லது அவதார புருஷரின் [illegible] டளையை முன்னிட்டு நீங்கள் உங்கள் சமயத்தைக் கடைப் பிடிப்பதில்லை. வேதங்களுக்குப் பெருமை ஸ்ரீகிருஷ்ணனால் ஏற்படவில்லை. கிருஷ்ணனுக்கு வேதங்களினால் பெருமை ஏற்பட்டது. வேத உண்மையைப் போதித்தவர்களுக்குள்ளே தலைசிறந்தவர் என்பதே ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் மகிமையாகும். மற்ற அவதார புருஷர்கள், மகான்கள் எல்லாருடைய விஷயத்திலும் இப்படித் தான். மனிதன் மோட்சம் அதாவது விடுதலை அடைவதற்கு வேண்டுவன வெல்லாம் வேதங்களில் இருக்கின்றன வென்பது நமது கொள்கை. "தத் துவ மஸி" (நீ அதுவே) என்னும் மகா வாக்கியம் கண்டு பிடிக்கப் பட்டபோது சமய ஞானம் பரிபூரண மடைந்துவிட்டது. அந்தந்தக் கால நிலைமைக் கேற்ப மக்களை அப் பழைய நெறியில் அழைத்துச் செல்வதே பாக்கி யிருந்தது. இதற்காக மகான்கள், ஆச்சாரிய புருஷர்கள் அவ்வப்போது தோன்றுகிறார்கள்.

* * *

வேதம்படிக்க எல்லாருக்கும் உரிமையுண்டு, சுக்ல யஜுர்வேதம் இதைத் தெளிவாக அறிவுறுத்துகிறது. எந்த ஒரு மனிதரையேனும் வேதம் ஓதக் கூடாதெனத் தடுப்பதற்கு வேதத்திலேயே யாரேனும் ஆதாரம் காட்ட முடியுமா? புராணங்கள் இத்தகைய தடைகளைஏற்படுத்துவது உண்மையே. வேதங்களில் சில பகுதிகளைச் சில சாதியார் படிக்கலாமென்றும், சில சாதியார் படித்தல் கூடாதென்றும், சில பகுதிகள் சத்திய யுகத்துக்கும் சில பகுதிகள் கலியுகத்துக்கும் உரியன வென்றும் புராணங்கள் விதிக்கின்றன. ஆனால் வேதங்கள் அவ்வாறு கூறவில்லை. எங்கேனும் வேலைக்காரன் எஜமானனுக்குக் கட்டளையிட முடியுமா? ஸ்மிருதிகள், தந்திரங்கள், புராணங்கள் முதலியவை வேதங்களுடன் இணங்கியுள்ள வரை தான் அவற்றை ஒப்புக்கொள்ளலாம். வேதங்களுடன் முரண்படும் போது அவற்றை நிராகரித்து விடவேண்டும். ஆனால் இக்காலத்தில் வேதங்களைவிடப் புராணங்களுக்கு நாம் அதிக மதிப்புக் கொடுத்து விட்டோம். வேதங்களுடன் முரண்படுபவை புராணங்களில் எவ்வளவோ இருக்கின்றன. உதாரணமாக ஒன்று கூறலாம். புராணங்களில் ஒருவர் பத்தாயிரம் வருஷம் உயிர் வாழ்ந்ததாகவும்,

மற்றொருவர் இருபதினாயிரம் வருஷம் உயிர் வாழ்ந்ததாகவும் சொல்லப்படுகின்றன. ஆனால் வேதத்தில் "மனிதனுடைய வாணாள் நூறுவருஷமே" (சதாயுர்வை புருஷ:) என்று கூறப்படுகிறது. இவற்றில் நாம் எதை ஏற்றுக் கொள்வதென்று சொல்ல வேண்டுமோ? இத்தகைய அசம்பாவிதங்கள் புராணங்களில் இருப்பினும் நான் புராணங்களை அடியோடு தொலைக்க விரும்பவில்லை. அவற்றில் யோகம், பக்தி, ஞானம், கர்மம் ஆகியவைகளைக் குறித்து மிக அழகான போதனைகளும், அறிவுரைகளும் காணப்படுகின்றன. இவற்றை நாம் ஏற்றுக் கொள்ளல் வேண்டும்.

* * *

வீரமூர்த்தி-சத்தியமும், தர்மமுமே உருக்கொண்டவன் - இலட்சியப் புதல்வன் - இலட்சியக் கணவன்-இலட்சியத் தந்தை - எல்லாவற்றிற்கும் மேலாக இலட்சிய அரசன் - இத்தகைய இராமனை நமக்கு வான்மீகி முனிவர் அளித்திருக்கிறார். அழகிலும், தூய்மையிலும், எளிமையிலும் வான்மீகியின் இராம கதையை வெல்வது வேறொன்றுமில்லை. சீதையைப்பற்றி என்னவென்று சொல்வேன்? உலகின் பண்டைக்கால இலக்கியங்கள் எல்லாவற்றையும், இனி வருங் காலத்தில் எழுதப்பட போகும் இலக்கியங்கள் எல்லாவற்றையும் நீங்கள் துருவி ஆராய்ந்தாலும், மற்றொரு சீதையை நீங்கள் காணமுடியாது. சீதையின் குணாதிசயத்தை வான்மீகி வர்ணித்தபோது, பெண் குலத்தின் வெற்றியை அவர் வர்ணித்து விட்டார். ஒருகால் இராமர்கள் பலர் இருந்திருக்கக் கூடும்; ஆனால் சீதையைப்போல் இன்னொருவர் இருந்ததில்லை யென்பது நிச்சயம்.

* * *

பெண்களின் குண நலங்களைப் பற்றி இந்திய இலட்சியங்களெல்லாம் சீதையின் வாழ்க்கையிலிருந்தே உருப்பெற்றனவாகும். ஆயிரம் ஆயிரம் வருஷங்களாக, ஆரியா வர்த்தத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலை வரையிலுள்ள ஆண், பெண், குழந்தைகள் அனைவராலும் போற்றப்பட்டுச்சீதை விளங்கி வருகிறாள். தூய்மையினும் தூய்மையானவர்; பொறுமையே உருக்கொண்டவர்; தமது வாழ்க்கை முழுதும் வாய்திறந்து பேசாமல் துன்பங்களைச் சகித்தவர்; கற்பரசிகளின் திலகம்; ஜனங்களின் தெய்வம்; கடவுளரின் தெய்வம்; இத்தகைய சீதை நமது இதய சிம்மாசனத்தில் எப்போதும் வீற்றிருப்பாள் என்பதில் சந்தேகமில்லை. நமது புராணங்கள் அழிந்துவிடலாம்; வேதங்களும் மறைந்து விடலாம்; சமஸ்கிருத மொழி அடியோடு இறந்து படலாம்; ஆனால் இந்நாட்டில் ஹிந்துக்கள் ஐந்து பேர் இருக்கும் வரையில் சீதையின் பெயர் அழியாது. சீதை நமது ஜாதியின் உயிர்நிலை; நாமெல்லாரும் சீதையின் குழந்தைகள். இந்தியப் பெண்களை சீதையின் இலட்சியத்திலிருந்து வேறு வழியில் கொண்டு போவதற்குச் செய்யப்படும் முயற்சிகளெல்லாம் தோல்வியே யடையும். இந்தியப் பெண்கள் சீதையின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியே முன்னேற வேண்டும். வேறு வழியில்லை.



# சைமன் கமிஷன் திக்விஜயம்!

—(o)—

## லட்சுமணபுரியில் போலீஸ் தடியடி

—(o)—

### பண்டித ஜவஹரிலால் இரத்தகாய மடைந்தார்

சைமன் கமிஷன் அங்கத்தினர் டில்லியிலிருந்து 28உ ஆக்ராவுக்குச் சென்றார்கள். இங்கே பகிஷ்காரக் கூட்டமும், வரவேற்புக் கூட்டமும் சமமாயிருந்ததென்று செய்திகள் கூறுகின்றன. அன்று பகலில் மொகலாய சக்கரவர்த்திகளின் பழையவாசஸ்தலங்களில் ஒன்றான படேபூர் ஸிக்ரிக்குப் போய் வந்தார்கள். அன்றிரவு நிலா வெளிச்சத்தில் தாஜ்மகாலின் சௌந்தரியத்தைக் கண்டு களித்தார்கள். மறுநாளும் ஆக்ராவில் தங்கிப் பழைய மொகலாய மன்னர்களின் மாளிகை முதலியவற்றைப் பார்த்து விட்டு லட்சுமணபுரிக்கு அடுத்த நாள் 30உயன்று வந்து சேர்ந்தார்கள்.

#### முதல் நாள்

இதற்கு முன்பே லட்சுமண புரியில் விசேஷ சம்பவங்கள் நேரிட்டிருந்தன. சைமன் கமிஷன் வருகையன்று பகிஷ்கார ஊர்வலம் நடத்துவதற்கு முன்னேற்பாடாக, ஒருவார முன்பிருந்தே தினந்தோறும் தலைவர்கள் ஊர்வலம் நடத்தி வந்தார்கள். ஊர்வலத்திற்குப்போலீஸ் சூபரின் டெண்டின் அநுமதிபெறவேண்டுமென்ற கட்டளைபிறந்தது. 28உயன்று ஊர்வலத்திற்குபகிஷ்காரக் கமிட்டியின் காரியதரிசியான பாபு மோகன்லால் ஸாக்ஸேனா என்பார் அநுமதி எழுதிக் கேட்டார். ஊர்வலத்திற்கு அவர் குறிப்பிட்டிருந்தவழி இராணுவவாசஸ்தலத்தின்மூலம் சென்றபடியால் போலீஸ் தலைவர் அநுமதி கொடுக்க மறுத்தார். பாபு மோகன்லால், நேரம் அதிகமாகி விட்டபடியால் இனி வழியை மாற்ற முடியாதென்றும், அநுமதி கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் ஊர்வலம் நடத்தவே போவதாகவும் தெரிவித்தார். அதன்படி மாலை 5-மணிக்கு அமீனாபாத் என்னுமிடத்தில் ஜனங்கள் கூடி ஊர்வலம் கிளம்பத் தயாரானார்கள்.

இச்சமயம் நகர மாஜிஸ்டிரேட் கான்பகதூர் ஸையத் அயினுடீன் அங்கே பலமான குதிரைப் போலீஸ் படையுடனும், காலாட் போலீஸ் படையுடனும் வந்து, "ஊர்வலத்திற்கு நீர் அநுமதி பெறவில்லை. ஆதலின் ஊர்வலம் கிளம்பிக் குறிப்பிட்ட வழி மூலம் செல்வதற்கு நான் விடமுடியாது" என்று உத்திரவு எழுதிக்கொடுத்தார். அதற்கு மோகன்லால் "குறிப்பிட்ட போலீஸ் சட்டத்தின்படி அநுமதிக்கு விண்ணப்பம் செய்துகொள்ளுதல் தான் அவசியம். நான் விண்ணப்பம் செய்துகொண்டு விட்டேன். அநுமதி வராவிட்டால் அதன் பொறுப்பு என்னுடையதன்று" என்று பதில் எழுதிக் கொடுத்தார். மாஜிஸ்ட்ரேட் வாய் மொழியாகப் பின்னர் ஜனங்களைக் கலைந்து போகும்படி சொன்னார். ஒருவரும் கேட்கவில்லை. அதன்மேல் குதிரைப் போலீஸ்காரர்களுக்கு ஊர்வலத்தைப் பலாத்காரமாய்க் கலைக்கும்படி உத்திர விட்டார். போலீஸார் கூட்டத்தின் மீது குதிரைகளை விட்டு அடித்தார்கள். ஜனங்கள் பலர் குதிரைகளின் குளம்புகளினால் நசுக்கப்பட்டுக் காயமடைந்தனர். பாணத்தடிகளால் சிலர் அடியுண்டனர். பின்னர் ஜனங்கள் அருகிலிருந்த தோட்டத்தில் கூடி மாஜிஸ்ட்ரேட்டின் செயலையும், போலீஸாரின் செயலையும் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

#### இரண்டாம் நாள்

மறுநாள் 29உ ஹஸ்ரத்கஞ் என்னுமிடத்தில் இதேவிதமான சம்பவம் நேர்ந்தது. இங்கே பண்டித ஜவஹரிலால் நேரு, பண்டித கோவிந்த வல்லப பண்டர் (ஐக்ய மாகாண சட்டசபையில் சுயராஜ்யக் கட்சித் தலைவர்) உள்ளிட்ட பலர் போலீஸாரால் தடிகொண்டு அடிக்கப் பெற்றனர். அடிபட்டவர்களில் இருவர் பெருங் காயமடைந்தார்கள். விவரம் வருமாறு:—

அன்று பிற்பகலில் நார்ஹாய் என்னுமிடத்தில் பகிஷ்காரக் கூட்டம் ஒன்று நடந்தது. இக்கூட்டம் முடிந்ததும் அதிலிருந்த ஜனங்கள் 12 பேருக்கு மேற் படாத சிறு கூட்டங்களாகப் பிரிந்து, அமீனாபாத்தில் நடக்க விருந்த லஜபதிராயின் துக்கக்கூட்டத்துக்குச் செல்லவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. இதை யனுசரித்து பண்டித ஜவஹரிலால் நேருவும், பண்டித கோவிந்த வல்லபரும் ஒரு கூட்டத்தை நடத்திச் சென்றார்கள். கொஞ்ச தூரம் சென்றதும் போலீஸார் இவர்களை வழி மறித்து நிறுத்தினர். போலீஸ் தலைவர் ஜவஹரிலாலைப் பார்த்து அவர் ஊர்வலத்தை நடத்திச் செல்கிறாரா என்று கேட்டார். பண்டிதர் பதில் சொல்ல மறுத்தார். உடனே குதிரைப் போலீஸார் அவர்களைத் தடிகொண்டு தாக்கினார்கள். ஜவஹரிலாலுக்கு இரண்டு அடி கிடைத்தது. கோவிந்த வல்லபர் நன்றாய் அடிக்கப்பட்டார். மற்றும் இருவர் பலமாய் அடிக்கப் பட்டனர். அவர்களில் ஒருவர் அபாயமான நிலைமையில் கிடக்கிறார். அடிபட்டவர்களில் "டைம்ஸ் ஆப் இந்தியா"வின் நிருபரும் ஒருவராம். பின்னர், ஜில்லா மாஜிஸ்ட்ரேட் வந்து, வாய் மொழியாக அநுமதி கேட்டால் மேலே செல்ல விடுவதாகச் சொன்னாராம். இவ்வநுமதி கேட்கவும் மறுத்து, பண்டித ஜவஹரிலால் முதலியோர் குதிரைப் போலீஸ் படையைப் பார்த்துக்கொண்டு கீழே உட்கார்ந்து விட்டார்கள். ஒரு மணி நேரம் இப்படியே காத்திருந்த பிறகு ஜில்லா மாஜிஸ்ட்ரேட் அவர்களைமேலே செல்லவிட்டார். இதற்குள்கூட்டம் அதிகம் சேர்ந்துவிட்டது. பின்னர் எல்லாரும் அமீனாபாத்துக்குச் சென்றார்கள். அங்கே உற்சாகமான பெருங் கூட்டம் நடைபெற்றது.

#### மூன்றாம் நாள்

மறுநாள் 30உலட்சுமணபுரியில் பரிபூரண வேலை நிறுத்தம் நிகழ்ந்தது. கடைகள் பெரும்பாலும் சாத்தப்பட்டிருந்தன. எங்கும் கறுப்புக்கொடி மயமாய்த் திகழ்ந்தது. பள்ளிக் கூடங்கள், கலாசாலைகள் எல்லாம் காலியாய்க் கிடந்தன. காலை 5 மணியிலிருந்தே ஜனங்கள் கூட்டங் கூட ஆரம்பித்து பண்டித ஜவஹரிலால், கோவிந்த வல்லபர் இவர்களின் தலைமையில் ஊர்வலமாகச் சென்று ஸ்டேஷனை அடைந்தனர். சுமார் 30,000 ஜனங்கள் கறுப்புக் கொடிகளுடன் கூடியிருந்தார்கள். ஸ்டேஷனிலிருந்து தூரத்தில் அவர்களுக்கென்று போலீஸார் இடம் ஒதுக்கியிருந்தனர். ஜனங்களை அவ்விடம் போகும்படி சொல்லியும் கேளாததால் மறுபடியும் குதிரைப் போலீஸார் ஜனக்கூட்டத்தைத் தாக்கினார்கள். ஊர்வலத்தின் முன்னணியி லிருந்த பண்டித ஜவஹரிலால், கோவிந்த வல்லப பண்டர், மோகன்லால் ஸாக்ஸேனா முதலியோர் பலமாக அடிக்கப் பட்டார்கள். ஜவஹரிலாலின் கையில் பட்ட காயத்திலிருந்து இரத்தங்கொட்டியது. கூட்டத்திலிருந்த சிலர் கல் எறிந்ததால் போலீஸ் தரப்பிலும் சிலர் காயமடைந்ததாகச் சொல்லப்படுகிறது. கமிஷனர்கள் வண்டியிலிருந்து இறங்கிச்சென்றபோது "சைமனே திரும்பிப்போ" என்னும் சத்தமும், அவர்களை வரவேற்கச் சென்ற இந்திய உத்தியோகஸ்தர்கள், பட்டதாரிகள் முதலியோர் செல்கையில் "வெட்கம் வெட்கம்" என்ற கூக்குரலும் வானை அளாவின. எல்லாரும் போன பின்னர், ஜனங்கள் நகரின் முக்கிய தெருக்களின் வழியாகக் காங்கிரஸ் காரியாலயத்துக்கு ஊர்வலமாய்ச் சென்று அங்கே கலைந்தார்கள். மாணாக்கர்களின் ஊர்வலங்கள் அன்று முழுதும் தெருக்களில் சுற்றிக் கொண்டிருந்தன.

#### பண்டித நேருவின் பிரசங்கம்

தமது அருமைப் புதல்வன் அடிபட்ட செய்தி யறிந்ததும் பண்டித மோதிலால் நேரு 29உ இரவே மோட்டாரில் புறப்பட்டு இரவெல்லாம் பிரயாணம் செய்து 30உ காலையில் லட்சுமணபுரி வந்து சேர்ந்தார். அன்று மாலை பெரும் பொதுக்கூட்டம் ஒன்று பண்டித கோவிந்த வல்லப பண்டரின் தலைமையில் நடந்தது. சுமார் 10,000 ஜனங்களுக்குமேல் வந்திருந்தனர். பண்டித நேரு இக்கூட்டத்தில் பேசியதின் சாரமாவது:—"காலையில் நான் பகிஷ்கார ஊர்வலத்திற் கலந்துகொள்ளாமற் போனது குறித்து வருந்துகிறேன். இரவெல்லாம் கண்விழித்துப் பிரயாணம் செய்தமையால் நான் வரக்கூடாதென்று ஜவஹரிலால் முதலியோர் பிடிவாதமாய்த் தடுத்து விட்டார்கள். எனினும், இன்றையச் சம்பவங்களின் பொருட்டு லட்சுமணபுரி ஜனங்களை நான் வாழ்த்துகிறேன். மிருகத்தனமான போலீஸ் தாக்குதலை நீங்கள் அஹிம்சையினால் எதிர்த்து நின்றீர்கள். ஜனங்கள் கல்லெறிந்தார்கள் என்று அரசாங்கத் தரப்பில் சொல்லப்படு மென்பதை நான் அறிவேன். அது உண்மையாகவும் இருக்கலாம். ஆனால் போலீஸார் முதலில் கல்லெறிந்தார்கள் என்பது அதைவிட உண்மை. இன்று பலாத்காரம் நிகழ வேண்டுமென்று உத்தியோகஸ்தர்கள் தீர்மானித்திருந்தார்கள். கூட்டத்திலிருந்து கல்லெறிந்தவர்கள் அவர்களுடைய ஆட்கள்தான் என்று சொல்லக்கூடும். பொறுப்புள்ள சிவில், போலீஸ் அதிகாரிகள் ஜனங்களைத் தங்கள் சொந்தக் கையினால் அடித்தார்கள் என்பதற்குப் போதிய சாட்சியம் இருக்கிறது. 30,000 ஜனங்கள் பதிலுக்குப்பதில் செய்ய எண்ணியிருந்தார்களாயின் அதன் விளைவு எவ்வளவு பயங்கரமா யிருந்திருக்குமென்று சொல்ல வேண்டியதில்லை. இன்று அதிகாலையில் ஒரு மனிதன் ஜவஹரிலாலிடம் வந்து தன்னிடம் இரண்டு கைத் துப்பாக்கிகள் இருக்கின்றனவென்று சொன்னனும். ஜவஹரிலால் அவனைப் பிடித்துப் போலீஸாரிடம் ஒப்புவித்திருந்தால் நலமாயிருந்திருக்கும். அப்போது அநேகமாக அவன் ஸி. ஐ. டி. யைச் சேர்ந்தவன் என்று வெளியாகி யிருக்கலாம். இன்றைய தினம் ஜனக்கூட்டம் பலாத்காரத்திலிறங்க வேண்டுமென்று அரசாங்கக் கட்சி விரும்பிற்று. ஆனால் ஜனங்கள் அந்தச் சூழ்ச்சியில் அகப்படாமல் அமைதியாக அடிகளைத் தாங்கிக் கொண்டார்கள்."

#### "அடிபட்டதில் மகிழ்ச்சியே"

பண்டித ஜவஹரிலால் நேரு வெளியிட்டிருக்கும் ஓர் அறிக்கையில் கூறுவதாவது:- "பல நண்பர்கள் என்னுடைய தேகநிலையைக் குறித்துக் கவலையுடன் விசாரித்திருக்கிறார்கள். நான் பூரண சௌக்யத்துடனும், உற்சாகத்துடனும் இருக்கிறேன் என்று அவர்களுக்கு உறுதி கூறுகிறேன். தோள்களிலும், கால்களிலும், முதுகிலும் நான் ஐந்தாறு தடியடி பெற்றது, சட்டத்தின்படி "பலமான காயம்" ஆகலாம். ஆனால் அவை காரணமாக எவ்விதத் துன்பமும் நான் அடையவில்லை. உண்மையில் அவ்வடிகள் எனக்கு நன்மையே செய்திருக்கின்றனவென்று சொல்லலாம். லக்ஷ்மண புரியில் நேற்று நடந்த மகத்தான பொதுஜன ஊர்வலத்தில் கலந்துகொள்ள எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது குறித்து மகிழ்ச்சியே யடைகிறேன். அதைப் பார்த்தாலே நோயுள்ள மனிதனும் குணமடைந்து விடுவான். அதில் கலந்து கொண்டு, லக்ஷ்மண புரியின் தீர இளைஞர்களுடன் சம அணியில் நின்று வேலை செய்யும் பாக்கியத்துக்காக ஒரு சில அடிகள்தானா படக்கூடாது? இப்புதிய அநுபவம் எனக்கு மிக்க மகிழ்ச்சி தந்திருக்கிறது. என் முதுகு தடி யடிகளுக்கு வளைந்துவிடக்கூடிய தன்று என்பதாக நான் நிச்சயம்பெற்றதும் எனக்குச் சந்தோஷமளித்திருக்கிறது. லக்ஷ்மணபுரி சர்வ கலாசாலையைச்சேர்ந்த தீரமாணாக்கர்கள் சிலர் பிடிவாதமாக என்னைச்சுற்றி நின்றிராவிட்டால் நான் அதிக காயமடைந்திருத்தல் கூடும். என் விருப்பத்திற்கு விரோதமாக அவர்கள் என்னைச் சூழ்ந்துகொண்டு என் மீது விழவிருந்த பல அடிகளைத் தாங்கள் தாங்கிக் கொண்டார்கள். என்னைப்பற்றி யாரும் கவலைப்பட வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்."





அலகாபாத்தில் கூடும் 11வது அகில இந்திய மிதவாத மகாநாட்டுக்கு ஸர் சிமன்லால் செதல்வாட் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

o o o

கல்கத்தாவில் காங்கரஸ் மகா சபை 29,30,31 ம் தேதிகளிலும் சர்வகட்சி மகாநாடு 22ந் தேதியிலிருந்து 28ந் தேதி வரைக்கும் நடைபெறும்.

o o o

இராஜ பாளையத்தில் லாலாஜியின் ஞாபகார்த்தமாக "லாலா லஜபதிராய் வாசகசாலை" ஒன்று திறக்கப்பட்டது என்று ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

o o o

அறந்தாங்கி, திருப்பத்தூர், இராஜ பாளையம் முதலிய இடங்களில் சென்ற வியாழனன்று லாலாஜி தினத்தை முன்னிட்டு அநுதாபக் கூட்டங்கள் நடை பெற்றனவென்று நிருபர்கள் தெரிவித்துள்ளார்கள்.

o o o

திரிசிராப்பள்ளி செயின்ட் ஜோசப் கல்லூரி எப். ஏ. மாணவராயிருந்த சுந்தரராவ் என்பவர், தில்லை நாயகம் பிள்ளை கட்டத்தின் சமீபமாய்க் காவேரி ஆற்றில் நீராடிக் கொண்டிருந்தபோது மூழ்கி உயிர் துறந்தார்.

o o o

நெல்லூர் ஜில்லா சர்வகட்சி மகாநாடு சென்ற சனிக்கிழமை டாக்டர் வரதராஜுலு நாயுடு தலைமையின் கீழ் இனிது நடைபெற்றது. அவ்வமயம் நேரு அறிக்கையை ஆதரித்து ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேறியது.

o o o

'வெண்டிரிஸ்' என்னும் கப்பல் மூழ்கியதால் தம் மனைவியார் இறந்து போனதற்காக மிஸ்டர் ஆர்கின் ஸ்டீவன்ஸ் என்பார் மேற்படி கப்பல் கம்பெனியார்மீது 10,400 பவுனுக்கு நஷ்டஈடு வழக்குத் தொடுத்திருக்கிறாராம்.

o o o

ஸ்ரீ எஸ். ஆர். தாஸ் காலஞ் சென்றதனால் இராஜப்பிரதிநிதியின் நிர்வாக சபையில் காலியான சட்ட அங்கத்தினர் பதவிக்கு வங்காள அட்வகேட் ஜெனரலாயிருந்த ஸர் பி. எல். மித்தர் நியமிக்கப்பட்டுள்ளார்.

o o o

சென்ற புதனன்று நடைபெற்ற கல்கத்தா காங்கரஸ் உபசாரணைக் கமிட்டியின் பொதுக் கூட்டத்தில் ஆலைத்துணிகளை விலக்கிக் கதர்த்துணிகளை மாத்திரம் பொருட்காட்சி சாலையில் வைப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

o o o

குளித்தலையில் சென்ற இரண்டு வாரங்களாகக் காக்கைகள் திடீரென்று கூட்டங் கூட்டமாக மரணமடைகின்றன வென்றும், ஒரு நாளைக்குப் பத்துப் பதினைந்து காக்கைகளுக்குக் குறையாமல் இறந்து போகின்றன வென்றும் ஒரு செய்தி கூறுகிறது.

o o o

முசிறி மிராசுதாரர் சிவஷண்முகானந்த முதலியார் மேற்படியூர் சப்மாஜிஸ்டிரேட்டைச் செருப்பாலடித்ததற்காக, சப்டிவிஷனல் மாஜிஸ்டிரேட் மிராசுதாரருக்கு இ. பி. கோ 353 வது பிரிவுப்படி இரண்டாண்டு கடுங்காவல் தண்டனை விதித்தாராம்.

o o o

சென்ற வாரம் குளையில் காற்பது வயதுடைய மாணிக்க நாயகர் என்பார் கார்த்திகைக்காக வெங்காய வெடிகள் தயார் செய்து கொண்டிருந்தார். அப்போது அவைகள் திடீரென்று வெடித்ததால், அவர் உடலில் அபாயகரமான தீக்காயங்கள் உண்டாகி இறந்து போனார்.

o o o

'ஜனநாயகம்' என்னும் பெயர் கொண்ட வாரப்பத்திரிகையும் 'ஸ்ரீகிறிஸ்து விஜயம்' என்னும் மாதப்பத்திரிகையும் ஸ்ரீமான் ச. தாமஸ் பாலையா பிள்ளை அவர்களை ஆசிரியராகக் கொண்டு வருகிற தைமீ முதல் வாரம் மதுரையிலிருந்து வெளிவருமென்று தெரிவிக்கப்படுகிறது.

o o o

மௌலானா முகம்மதலி பாலஸ்தீனத்திலிருந்து இந்தியாவுக்குப் பிரயாணமாகி விட்டார். பிரயாணமாகும்போது ஒரு கூட்டத்தில் தாம் பிரிட்டிஷ் தேசத்தினருக்குச் சிறந்த நண்பரென்றும், ஆனால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குத் தாம் முழு விரோதி யென்றும் அவர் பேசினாராம்.

o o o

ஆரணியில் டிசம்பர் முதல்தேதியிலிருந்து அரசியல் சம்பந்தமான பிரசங்கங்கள் எதுவும் நிகழ்த்தல் கூடாதென்று பிரயோகித்திருந்த கி. பி. கோ. 144-வது சட்டம் ஸ்ரீமான்கள் ஜமதக்னி நாயகர்; ஆக்கூர் அனந்தாச்சாரியார், ஆரணி ஸ்ரீநிவாச ராவ் இவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றது.

# கலம்பகம்

சமீபத்தில், கோட்டாறு, பாதகுலத் தெருவில் ஒரு வீட்டில் ஒரு பெண்ணை அவள் மாமியும் நாத்தியும் சேர்ந்து நன்றாய்ப் புடைத்தார்களாம். அப்போது வீட்டில் கணவன் இல்லாததால், அப்பெண் கழுத்தில் சுருக்கிட்டுக் கொண்டு மாண்டாள். போலீஸார் விசாரணை செய்து வருகிறார்.

o o o

கல்கத்தாவைச் சேர்ந்த டாங்கா என்னும் கிராமத்திலுள்ள ராலி கம்பெனியாரின் கிளைக்காரியாலயத்துக்குள் சில கொள்ளைக்காரர்கள் நுழைந்து பூமிக்குள் புதைக்கப்பட்டிருந்த பொக்கிஷ இரும்புப் பெட்டியிலிருந்து 20 ஆயிரம் ரூபாக்களை அபகரித்துச் சென்றார்கள்.

o o o

கோவில்பட்டி இராஜத்துவேஷ வழக்கை சென்னை ஹைகோர்ட்டுக்கு மாற்றிக் கொள்ள அவகாசமிருப்பதற்காக வழக்கின் விசாரணை சென்றமாதம் 28ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது. அந்தத் தவணையும் போதாதென்று எதிரிகளின் வக்கீல் கேட்டுக்கொண்டதால், விசாரணை இம்மாதம் 11ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

o o o

சென்னைச் சட்டசபை அங்கத்தினராயும் சேலம் வக்கீலாயு மிருந்த ஸ்ரீமான் பி. வி. நரசிம்ம ஐயர் சில வாண்டுகளுக்கு முன் குடும்பத்தில் ஒன்றன்பின் ஒன்றாக நேர்ந்த துக்கங்களினால் மனமுடைந்து உலக வாழ்க்கையில் வெறுப்புற்றுத் திருவண்ணாமலையிலுள்ள ஸ்ரீ ரமணமுனிவரின் சீடராகச் சேர்ந்து தியாக வாழ்க்கை நடத்தி வருகிறாராம்.

o o o

சீனாவில் பெக்கிங் நகரத்தினின்றும் வெளியாகும் 'பெக்கிங் கெசட்' என்னும் பத்திரிகையே உலகத்தில் மிகவும் புராதன பத்திரிகையாம்; அது கடந்த ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரிருந்து நடைபெற்று வருகிறதாம். அதன் பத்திராசிரியர்கள் 1500 பேர்களுக்கு மேலாகவே மரண தண்டனை அடைந் திருப்பதாகக் கூறப்படுகிறது.

o o o

காபூல் வாசிகளும் காபூலுக்கு விஜயஞ் செய்யும் ஜனங்களும் 21—3—1929 முதல் கொண்டு ஐரோப்பிய உடையும் தொப்பியும் தரிக்க வேண்டுமென்றும், அங்ஙனம் செய்யாதவர்களுக்கு 5 முதல் 10 ஆப்கன் நாணயங்கள் வரை அபராதம் விதிக்கப்படுமென்றும் ஆப்கன் அரசர் காபூல் நகர சபைத் தலைவருக்கு ஓர் உத்திரவுக் கடிதம் அனுப்பியிருக்கிறாராம்.

o o o

வாங்கனீர் சமஸ்தானத்தைச் சேர்ந்த 16 வயதுள்ள ஓர் இராஜ புத்திரப் பெண்ணை ஏறக்குறைய 50 வயதுடைய ஆழ்வார் மகாராஜா கலியாணம் செய்து கொள்ள ஏற்பாடானதைத் தடுக்க, க்ஷத்தியவர் இராஜபுத்திரர்கள் முயற்சி செய்வதுமன்றி, மேற்படி சமஸ்தானத்திலுள்ள சட்டத்தைக் கொண்டு இதைத் தடுக்க வாங்கனீர் ராஜாவுக்கு ஒரு மனுவும் அனுப்பி யிருக்கிறார்கள்.

o o o

சென்ற வாரம் கூடிய பம்பாய் மாகாண முஸ்லீம் லீக்கின் நிர்வாகக் கூட்டத்தில் நேரு அறிக்கையை அங்கீகரிக்கக் கூடாது என்ற தீர்மானம் கொண்டு வரப்பட்டது. மேற்படி லீக்கின் காரியதரிசிகளுள் ஒருவரான ஜனப் சாக்லா ஒருவர்தான் அத் தீர்மானத்தை எதிர்த்தார். எனவே தீர்மானம் நிறைவேறியது. இதனால் ஜனப் சாக்லா தம் காரியதரிசி பதவியை ராஜீனாமா செய்துள்ளார்.

o o o

தாராபுரம் திருப்புகழ் சபையின் முதலாவது ஆண்டு நிறைவுவிழா (26-11-28) திங்கட்கிழமை இவ்வூர் முனிசிபல் தலைவர் ராஜா - க. இராமசாமி செட்டியாரவர்கள் அவைத் தலைமையின் கீழ் இனிது நடைபெற்றது. அது போழ்து அருமையான விரிவுரை நிகழ்த்தியதற்காகக் கணியூர் ஜனப் கெ. அப்துல் சுகூர் சாயபு அவர்களுக்குப் பொற்பதக்கம் அளிக்கப்பெற்றதென்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

o o o

சென்ற திங்கட்கிழமையன்று சைமன் கமிஷனர் லட்சுமண புரியிலிருந்து கான்பூருக்குவந்து சேர்ந்தனர். அதிகாரிகளும் அரசாங்க ஒத்துழைப்பாளர்களும் சேர்ந்து அமைதி நிலை நாட்டினர். பொது வரவேற்பில்லை. ஆனால் சைமன் குழு நகரத்துக்குள் போகுதும் 10 ஆயிரம் பேர்களடங்கிய பஹிஷ்காரக் கூட்டத்தார் கறுப்புக் கொடிகளுடன் 'சைமனே திரும்பிப்போ' என்று கூக்குரலிட்டனர்.

சீனத்திலுள்ள பெக்கிங்கில் டிராம்வே தொழிலாளர்கள் தங்கள்குறைகளை நிவர்த்தி செய்துகொள்வதற்கு வேலைநிறுத்தம் செய்வதற்குப் பதிலாக ஒரு தந்திரத்தைக் கையாண்டார்கள். டிராம் கண்டக்டர் (டிக்கட் கொடுப்பவர்) களெல்லாம் டிராம் வண்டிகளில் கட்டண மின்றியே இனமாகப் பிரயாணிகளை ஏற்றிச் சென்றார்கள். அதிகாரிகள் விரைவில் இணங்கிவந்து விடவே சமாச முடிவு ஏற்பட்டது.

o o o

சர் ஜான் சைமனின் மனைவியார், லட்சுமணபுரிக்கு வரும் வழியில் தம் மூக்குக் கண்ணாடி உடைந்து விட்டதால், புதிதாக ஒரு கண்ணாடி வாங்க 'லாரன்ஸ் மேயோ' என்னும் ஐரோப்பியக் கம்பெனிக்குச் சென்றாராம். அங்கு அவ்வம்மையார் "அப்பா! 'சைமனே திரும்பிப் போ' என்னும் பகிஷ்கார ஒலி கேளாத ஓர் இடத்துக்கு இப்போது வந்து சேர்ந்தேன்" என்று கூறியதாகத் தெரியவருகிறது.

o o o

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியைச் சேர்ந்த டாக்டர் ராமன், அப்துல் கப்பூர் என்னும் நோயாளிக்கு அளவுக்கு அதிகமாக மருந்து கொடுத்து மரணமுண்டாக்கி விட்டாரென்று மேற்படியார்மீது குற்றஞ் சாட்டப்பட்டு நடைபெற்ற வழக்கில், அவர் கொடுத்த அதிக மருந்தினால் தான் நோயாளி மரண மடைந்தாரென்று நிரூபிக்கப்படாததனால், சென்னை மாகாண பிரதம மாஜிஸ்டிரேட் எதிரியை விடுதலை செய்து விட்டார்.

o o o

சென்ற மாதம் 29-ந்தி யன்று அரியலூர் போர்டு உயர்தரக்கலாசாலையில், முதல்உதவி ஆசிரியர் ஸ்ரீமான் கே. இராமச்சந்திர ஐயர் பி. ஏ., எல். டி. தலைமையில் ஆசிரியர் சங்கக் கூட்டம் ஒன்று வாலாஜி துக்க தினம் கொண்டாடக் கூடிற்று. அதுபோது திருவாளர் திரு. பொ. சாமிநாத தேசிகர் லாலாஜி பிரிவைக் குறித்தியற்றிய இரங்கற்பாக்கள் வாசிக்கப்பெற்று ஓர் அநுதாபத் தீர்மானமும் நிறைவேறியது என்று திரு எஸ். சடகோபன் எழுதுகிறார்.

o o o

பர்லின் நகரில் மார்த்தா என்னும் ஒரு சமையல்காரி தான் இளவரசி மார்கரெட் என்று கூறிக்கொண்டு பல கடைக்காரர்களை ஏமாற்றிக் கடனுகச் சாமான்கள் வாங்கி வந்தாளாம். இவள் இளவரசியைப்போலவே நடித்து வந்தாளாம். இந்த இரகசியம் வெளியாகி விட்டதால், இப்பெண்ணுக்கு நீதிபதி இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனை விதித்தாராம். இப்பெண், தான் ஏமாற்றி ஈட்டிய பொருளைக் கொண்டு மிடியால் துன்புறும் தன் உறவினர்களுக்கு உதவி புரிந்ததாகக் கூறப்படுகிறது.

o o o

லாலாலஜபதிராயின் இலட்சியங்களைப் பரப்புவதற்காக ஓராண்டுகாலம் முனைந்து வேலை செய்ய ஆரிய சமாஜத்தின் பொதுக் காரியதரிசி ஸ்ரீமான் சத்தியார்த்தி விரத மேற்றுக் கொண்டுள்ளாராம். இக்காலத்தில் இவர் பக்கிரியைப் போன்ற எளிய முறையில் கதராடை அணியவும் தரையில் படுத்துறங்கவும், இனியதின்பண்டங்களை விலக்கவும் உறுதிகொண்டிருக்கிறாராம். தாழ்த்தப்பட்டவரின் விடுதலை சம்பந்தமாக லாலாஜியின் கொள்கைகளை மொத்தம் ஐந்து லட்சம் ஜனங்களிடையே பரப்பவும் அவர் தீர்மானித்திருக்கிறார். அவருடைய தோழர்கள் இருவரும் இதேவிதமான விரதம் ஏற்றுக் கொண்டு அவருடன் வேலை செய்யத் தீர்மானித்திருக்கிறார்களாம்.

o o o

மாயவரத்துக் கருகிலுள்ள வெழனரி என்னும் கிராமத்தில் ஒரு கிழவர் தமது மருமகன் செலுத்த வேண்டிய கடனுக்காக பிடி வாரண்டு பிறப்பித்திருந்தார். இதை அறிந்த அவர் மகள் தன் கணவன் கடன் தீர்க்கவேண்டி, தான் தாயாரிடம் கொடுத்து வைத்திருந்த பணத்தைத் தரும்படி வற்புறுத்தினள். தகப்பனார் வற்புறுத்தலைப் பொறாது வெளியூர் சென்று விட்டார். தாயார் ஒரு நாள் இரவு பணம் தாமுடியாதென்று மகளை வெளியே தள்ளித் தாளிட்டுக் கொண்டாள். உடனே மகள் திண்ணையில் தூக்கிட்டுக்கொண்டு இறந்து போனாளென்று சொல்லப்படுகிறது. காலையில் வெளிவந்த தாய் பெண்ணின் பிரேதத்தைக் கண்டு அதை வைக்கோற்போரில் மூடிவிட்டுக் கிராம அதிகாரிகளிடம் தெரிவித்ததாகவும், போலீசார் அப்பெண்ணின் தாய் தகப்பன் ஆகிய இருவரையும் கைது செய்திருக்கிறார்களென்றும் தெரிய வருகின்றன.

o o o

கொச்சியில் இரும்பளம் என்ற கிராமத்தில் இரண்டு ஆதிதிராவிடச் சிறுவர்கள் மரப்பொந்தில் இருந்த பாம்பின் முட்டைகளை ஏதோ பறவையின் முட்டைகளென நினைத்து எடுத்துக்கொண்டனர். பிறகு குடிசைக்குத் திரும்பும்போது அம்முட்டைகளை விளையாட்டாக உடைத்து ஓடுகளை வழி முழுதும் போட்டுக் கொண்டே வந்தார்கள். வெளியில் சென்றிருந்த பாம்பு திரும்பி வந்ததும் முட்டைகளைக் காணாது, முட்டைகளின் ஓடுகள் சிதறியிருந்ததைக் கொண்டு அப்பையன்கள் குடிசையைக் கண்டுபிடித்து அதனுள்ளே நுழைந்து ஒரு சிறுவனைக் கடித்து விட்டது. அவன் உடனே இறந்தான். மற்றொரு பையனையும் துரத்த வாரம்பித்தது. அதன் பின்னரே சிறுவன் நடந்ததைக் கூறினான். எனவே அவர்கள் பாம்புக்குப் பயந்து வேறு குடிசைக்குச் சென்று விட்டனர். அங்கும் பாம்பு அவர்களை விட்டபாடில்லை. கடைசியில் அந்த அரவத்தை அடித்துக் கொன்றார்கள்.

o o o

செந்தமிழ்த் திருமணம்:— பூனா மேற் சருவகலைக் கலாசாலைத் தலைமைத் தமிழாசிரியர் திருவாளர் அ. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கட்கும், செந்தமிழ்ச் செல்வியார் திரு கிருஷ்ணம்மாளுக்கும் கார்த்திகைத் திங்கள் ஏழாம் நாள் திருமணம் நிகழ்ந்தது. கம்மகுல பாகவதர்கள் புரோகிதர்களா யமர்ந்து தமிழ் மறை ஓதித் திருமண வினை நிகழ்த்தி வைத்தார்கள். இத்திருமணம் எவ்வித ஆரவாரமுமின்றி எளியமுறையில் ஒரே நாளில் நடைபெற்றதும் பொருளற்ற சடங்குகள் ஒழிக்கப் பட்டதும் குறிப்பிடத்தக்கனவாகும். பெண்மக்களைப் போலவே ஆண்மக்களும் நிறை தவறாமல் இருக்க வேண்டுமென்பதற்காக அம்மியாகிய அகலிகையின் பக்கம் தேவேந்திரனையும் வைத்து ஒரு சடங்கு புதுவதாகச் செய்யப்பட்டது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

லஜபதிதினம்:— சென்ற 29-ந் தேதியன்று லாலாலஜபதி ராயின் மரணத்தை முன்னிட்டுத் தேசமெங்கும் துக்கதினமாகக் கொண்டாடப் பெற்றது. நகரங்கள், பட்டணங்கள் எல்லாவற்றிலும் பொதுக் கூட்டங்கள் நடை பெற்றன. வார்தாவில், ஸ்ரீ ஜம்னலால் பஜாஜ் அவர்கள் தலைமையின்கீழ் நடந்த கூட்டத்தில் லாலாஜியின் ஞாபகச் சின்ன நிதிக்கு சேத்கியான் ஷியாம்தாஸ் பர்லா ரூபா 15,000மும், ராய் சாஹிப் நாராயண தாஸ் ரூபா 2,100-மும் சேத் ஜம்னலால் பஜாஜ் ரூபா 1000-மும் அளிப்பதாய் வாக்குறுதி செய்தார்கள். இன்னும் பலவிடங்களிலும் பண வசூல் செய்யப்பெற்றது. சென்னைக் கடற்கரையில் அன்று நடந்த கூட்டத்தில் ஸ்ரீமான் எம். எஸ். சுப்பிரமணிய ஐயர் தம் கையிலணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றி, அது ஒன்று தான் தம்மிடமிருக்கும் ஆஸ்தி என்றும், அதை லாலாஜி நிதிக்குக் கொடுத்து விடுவதாகவும் கூறி அளித்தார்.

o o o

நீர்வாழ்ப் பறவைகளுக்குள்ளே மிகப் பெரியது "அல்பாட்ரஸ்" என்னும் பறவையாம். இதன் சிறகுகள் 14 அடி நீளம் வளருமாம்.

o o o

ஒரு ஜதை ஊர்க்குருவிகளின் சந்ததிகள் பத்து வருஷகாலம் எவ்வித இடையூறுமின்றிக் கிளைத்துவருமானால் பத்தாம் வருஷக் கடைசியில் 27500 கோடி ஊர்க்குருவிகள் இருக்குமாம்.

o o o

உலகில் மிகவும் வயது சென்ற பூனை ஆஸ்வெஸ்டிரி என்னுமிடத்தில் இருக்கிறது. அது மிஸ் ஈவான்ஸ் என்னும் மாதுக்குச் சொந்தமானது. அதற்கு இப்போது 25 வயது நிறைந்து 26-ம் வயது நடக்கிறது. இதுவரை அது 220 குட்டி போட்டு வளர்த்திருக்கிறது.

## சித்தர் மறை

அறக்கொடி நாட்டுமின்! அறமுரசறைமின்!! வம்மின் வம்மின் அறிஞர்களே!! எண்ணியதைப் பெறுமுன் இறப்பதிற் பயனென்? உடம்பை நோயின்றிக் காக்க, உள்ளத்தை திடமாக்கி மகிழ, உயிரை வளர்த்து நீடு வாழ, உயிர்க் குயிராகிய இறைவன், ஒளி வடிவைக் காண, அவன் நடனத்தைப் பத்து நாடிகளி லுணர, அவன் பூசைப் பத்தொலிகளைச் செவிகளிற் கேட்க, இம்மை மறுமைப் பயனடைய, சித்தர்கள் கண்ட முறை, திருமூலர் மந்திரப் பொருள், ஔவையார் குறள், மதிக் கொணப் பொருள், இளமை கழியுமுன் உரன் குறையுமுன், கற்றுக் கொள்ள, மக்கள் வேண்டும். அனுபவ மில்லாது பணமாக்கக் கருதி, நூலெழுதி அதிற் கண்டு கற்றுக் கொள்ளுங்கள் என்று கூறும் ஆசிரியர் போலன்று. நேரே காட்டிக்கொடுக்கத் தயார். விடா முயற்சி வேண்டும்; மெல்லிய பயிற்சி வேண்டும். இது வெளியாகு மூச்சுசமதி மண்டலத்திற் சேர்க்கும் வழி. சாதிமத சமயப் போர் வேண்டாம்.

சா. சி. சிவசங்கர முதலியார்,
5. ஆள்வார்பேட்டைத் தெரு,
மயிலாப்பூர்.

## பாரதி பாடல்

சென்ற மாதம் 27ந்தேதி யன்று சென்னைச் சட்டசபையில் பாரதியாரின் பாடல் பறிமுதல் சம்பந்தமாகச் சில கேள்விகள் போடப்பட்டன. கேள்விகளும் பதில்களும் வருமாறு :—

ஸ்ரீமான் நாராயண ராஜு : பாரதி பாடல்களைப் பறிமுதல் செய்வதற்கு முன்னால் இம்மாகாண அரசாங்கத்துக்கும் பர்மா அரசாங்கத்துக்கும் ஏதேனும் கடிதப் போக்கு வரவு நடந்ததா? அங்ஙனமாயின், அக்கடிதங்களைச் சபையின் பார்வைக்குத் தயைசெய்து வைக்கக்கூடுமோ?

கனம் கிருஷ்ண நாயர் : கிடையாது.

ஸ்ரீ நாராயண ராஜு : (அ) சென்ற அக்டோபர் மாதம் 13-ந் தேதி இச்சபையில் பாரதி பாடல் பறி முதல் சம்பந்தமாக நிறைவேறிய அவசரப்பிரேரபணையைக் குறித்து அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறதா? (ஆ) அவ்விஷயமாக இச்சபையின் அபிப்பிராயமும், சபையின் நடவடிக்கையின் விவரமும் பர்மா அரசாங்கத்துக்கு அனுப்பப்பட்டனவா? (இ) மேற்படி தேதிக்குப் பின்னர் சென்னை அரசாங்கத்துக்கும் பர்மா அரசாங்கத்துக்கும் கடிதப் போக்கு வரவு நடந்ததுண்டா? அப்படியானால் அதன் விவரமென்ன?

பதில் : (அ) மறு உத்தரவு வரையில் இனிமேல் பறி முதல் செய்ய வேண்டாமென்று போலீசாருக்கு அரசாங்கம் உத்திரவு பிறப்பித்திருக்கிறது. (ஆ) இல்லை. (இ) திருவல்லிக்கேணி ஹிந்திப் பிரசார அச்சுக்கூட நிர்வாகி ஹைகோர்ட்டில் கொடுத்துள்ள மனுச்சம்பந்தமாக வழக்கு நடத்துவதைப்பற்றி பர்மா அரசாங்கத்தின் ஆலோசனை கேட்கப்பட்டது. மனுவை எதிர்க்க வேண்டுமென்று அவர்கள் பதில் எழுதியிருக்கிறார்கள்.

ஸ்ரீமான் முத்துரங்க முதலியார் : மறு உத்தரவு வரையில் இனிமேல் புத்தகங்களைப் பறி முதல் செய்ய வேண்டாமென்று போலீசாருக்குக்கட்டளையிட்டிருக்கிறபடியால், ஏற்கனவே பறிமுதல் செய்த புத்தகங்களை அரசாங்கத்தார் திருப்பிக்கொடுத்து விடுவார்களா?

கனம் கிருஷ்ண நாயர் : முடியாது; முடியாது.

ஸ்ரீ நாராயண ராஜு : இச்சபையின் அபிப்பிராயம் பர்மா அரசாங்கத்தாருக்குத் தெரிவிக்கப்பட்டதா?

கனம் கிருஷ்ண நாயர்: இல்லை.

ஸ்ரீ நாராயணராஜு : ஏன்? இல்லை.

கனம் கிருஷ்ணநாயர் : அரசாக்கம் அதை அவசியமென்று கருதவில்லை.

ஸ்ரீ நாராயண ராஜு : இவ்வரசாங்கத்தார் பர்மா அரசாங்கத்தின் யோசனையை ஏன் கேட்டார்கள்?

கனம் கிருஷ்ண நாயர் : ஏனெனில் அவர்கள் பிறப்பித்த அறிக்கையின் மீதே சென்னைப் போலீசார் பறி முதல் செய்தனர்.

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி : ஹைகோர்ட்டில் மனுவை எதிர்க்க அரசாங்கம் தீர்மானித்து விட்டதா?

பதில்: ஆம்.

கேள்வி ; அரசாங்கத்தார் தங்கள் சொந்த வக்கீல்களை ஆலோசனை கேட்டார்களா?

பதில்: இல்லை.

கேள்வி : வழக்கில் தோல்வி யடைந்தால், பர்மா அரசாங்கம் செலவுத் தொகை கொடுக்குமா?

பதில் : இதைப்பற்றிப் பின்னால் ஆலோசிக்க வேண்டும்.

கேள்வி : இவ்வரசாங்கத்துக்கு இவ்விஷயமாகச் சுதந்திரமான அபிப்பிராயம் ஏதேனுமுண்டா?

பதில் : ஒன்றுமே கிடையாது. அவர்கள் இவ்விஷயமாக ஆலோசிக்கவேயில்லை.

---

சென்னை வண்ணாரப்பேட்டையிலுள்ள ஒரு சலவைச்சாலையில் வேலைசெய்து வந்த பதினைந்து வயதுடைய இராஜகோபால் நாயுடு என்னும் சிறுவன் தண்டையார்ப் பேட்டை ரயில்வே போர்டுக் கருகில் விளையாடிக் கொண்டிருந்த போது, மின்சாரத் தந்திக் கம்பிகளில் மாட்டிக் கொண்ட ஒரு காற்றாடியை எடுக்கக் கம்பத்தின் மீது ஏறினான். ஏறி அதைத் தொட்ட உடனே மின்சாரசக்தி போய்க் கொண்டிருந்த ஒரு கம்பி அவன் கை மீது பட்டுவிட்டது. அந்தக் கணமே 25 அடி உயரத்திலிருந்து அவன் கீழே விழுந்து சில நிமிஷங்களுக்கெல்லாம் பரிதாப மரணமெய்தினான்.

## சிநேகம்

ஜனாப் த. க. மு. அப்துல் மஜீது எழுதுவது :—

உலகாளும் அரசன் முதல் வறியனீறாக சிநேகமென்றதொடர்பினால்பிணிக்கப்படுகின்றனர். சிநேகமென்ற சொல் நந்தாய் மொழியில் பல்வேறு பதங்களாக விளங்குகிறது. சிநேகமே ஒற்றுமைக்கு அடிப்படை. சிநேகத்தின் மாண்பை அறிஞர்களான அறநூலார் அறைந்து போந்ததை இதன் கீழ்க்காண்க.

"மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே [வேண்டும்
பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடு மின்னா
மரீஇ இப் பின்னைப் பிரிவு"

"கோடிகொடுத்துங் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடி பெறும்"

"நிறை நீரநீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீரப் பேதையார் நட்பு"

"முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு"

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக் கண் களைவதா நட்பு"

"குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தி யாக்க நட்பு"

"குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல் வேண்டு நட்பு"

இன்னும் பலப்பல பிரமாணங்களால் சிநேகப் பெற்றியை ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் கூறிப்போந்தனர். இந்நாளில் இருவகைச் சிநேகத்தைக் கேள்வி யுறுகின்றோம். அவையாவன நற்சிநேகம் துற்சிநேகமாம். நற்சிநேகன் சத்தியம், அன்பு, பொறுமை, அஞ்சாமை, சாந்தம், இரக்கம், தியாகம் முதலிய நற்குணங்களை யுடையவனாயிருப்பான். துற்சிநேகன்கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் ஐம்பெரும் பாவங்களுக்கு இருப்பிடமாயிருப்பான்.

இப்பேருலகில் ஒருவர்க்கொருவர் சிநேகமாய் ஆயுள் காலம்வரை யிருத்தல் மிக அருமை யெனத் தெரிகிறது. மனிதரில் இடையிடையே சின்னாள் சிநேகமும் பின்னர் விரோதமும் கொண்டு நடந்துகொள்வோரை ஆங்காங்கே பார்க்கின்றோம். இது உலக வழக்கென்று சொல்லப்படுகிறது. ஆனால் மனித இலக்கணத்தோடு வாழ்பவர் மிகச்சிலரே. அன்றியும் சிலர் சின்னாள் நன்னடத்தையைக் கைப்பற்றிப் பின் அநுசாரத்தைக் கையாளுகின்றனர். சிலர் முன்னர் துன்மார்க்கத்தைக்கையாண்டு பின் சன்மார்க்கத்தை யனுஷ்டிக்கிறார்கள். இச்செய்கைக்குத் தக்கவாறு நாம் ஒருவரோடொருவர் நட்பாயிருந்து பிரிந்துகொண்ட போழ்தும் நட்பும் விரோதமுமின்றி மத்தியமாய் நடந்து கொள்வது நலமெனக்கொள்வோம். இதற்கு மாறாக ஒருவனையொருவன் சிநேகத்தினின்றும் பிரிந்து கொண்டவிடத்தில் 'அவனுக்கு அப்படிச் செய்தேன்; இப்படிச் செய்தேன். அதை யெல்லாம் மறந்து விட்டான் பார். அவனை என்செய்கிறேன்' எனப் பலவாறாக தூஷித்தும் வற்புறுத்தியும் பேரோலமிட்டுக்கொண்டு திரிவோர் பலரையும் நாம் பார்க்கின்றோம். இவர்களின் பேச்சாலும் நடத்தையாலும் இவர்கள் உண்மையில் நண்பனுக்கு ஒருவித நன்மையுஞ் செய்திருக்க மாட்டார்களென்பது புலப்படுகிறது. ஒருவனோடு சிநேகமாயிருந்து அவனில்லாதவிடத்தில் அச்சிநேகனைப் புகழ்ந்து பேச வேண்டியிருக்க இகழ்ந்து பேசுவோர்களையும், சிநேகனை அடுத்து உண்டு சுகித்து அவனை விட்டு நீங்கிய கணநேரத்தில் அவ்வளவுக்கவ்வளவு புறங் கூறுவோரையும் பார்க்கிறோம். "சீரிய வொன்னலுக்கீய ரென்னலுஞ் சேரினத்தியல்பினூர்ச் சேர்ந்த நாமமே" என்ற ஆன்றோர் கூற்றிற்கிணங்க நல்லவன் கெட்டவனையடுத்தால் நல்லவன் கெட்டவனாய் விடுதலும் இன்றேல் கெட்டவன் நல்லவனாய் விடுதலும் இயல்பன்றோ? எனவே, நாம் போலிகளான அற்ப சிநேகரையடுத்து நம் உயரிய வாழ்க்கையை இழந்து விசனமுறாது நற்சிநேகனையடுத்து அவனுக்கு ஒல்லும் வகை நன்மை புரிந்து சந்தனமரத்தைச் சார்ந்த அகில மரமும் வாசனை பெறுவதுபோல் அவனது நற்குணங்களைக் கையாண்டு ஒருயிர் ஈருடலாயிருக்க யாவற்றிற்கும் முதன்மையுற்ற முழுமுதற் கடவுள் அருள்புரிவானாக.



## கடவுள் காட்சியும் தாயுமானாரும்

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானர் அருளிச்செய்த "ஐவகை எனும் பூதம்" என்னும் திருப்பாட்டைப் பீடிகையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலா மென்பது. விலை அணு 4. வேண்டுவோர் ஐந்து அணு ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். ஏக காலத்தில் 12-புத்தகங்கள் வாங்குவோருக்குத் தபால் செலவு இனம்.

முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.



வெளிவந்து விட்டது!
தெளிபொருள் விளக்கப் பொழிப்புரையுடன் (கையடக்கமானது)

## திருக்குறள்

அட்வகேட் கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் இயற்றியது.

திருக்குறளுக்குப் பண்டுதொட்டு எழுந்த எல்லா உரைகளையும்விட இது மிகவும் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றது. கற்றுரேயல்லாமல் கல்லாதாரும் எளிதிற் படித்து உணரும்படி இஃது அமைந்திருக்கின்றது.

ராப்பர் அ. 14; காலிகோ ரூ. 1-4. ரேக்சைன் ரூ. 3-0.

சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், 6, பவளக்காரத் தெரு, சென்னை.



புதியபதிப்பு! புதியபதிப்பு!!

### திருமூலர் திருமந்திரம்

பலபிரதிகளுக்கிணங்கப் பரிசோதித்தும், சில அரும்பாடல்களை * இக்குறியிட்டு விளக்கியும் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பகராதி சேர்த்தும் நல்ல காகிதத்தில் அழகுபெற அச்சிட்டு காலிகோ பயிண்டு செய்யப்பட்டுள்ளது. விலை ரூபா 2-4-0.

முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.



## இல்லறம்

### கணவனின் புகார்

"என் மனைவி மிகவும் நல்லவள். ஆனால் சில சமயம் பெரிதும் எனக்குத் தொல்லை கொடுக்கிறாள். நான் என்னுடைய கஷ்டங்களினால் ஏற்கனவே கலைப்புற்றிருக்கும் போது அவள் தன் கஷ்டங்களைச் சொல்ல ஆரம்பித்து விடுகிறாள். பிரதிதினமும் நடந்த சிறு சிறு சம்பவங்களையெல்லாம் என்னிடம் கூறி யோசனை கேட்கிறாள். நான் என்னுடைய கவலைகளைப்பற்றி அவளிடம் சொல்வதேயில்லை. அவள்மட்டும் ஏன் என்னைத் தொந்திரவு செய்ய வேண்டுமென்று தோன்றுகிறது. இதற்கு நான் என்ன செய்யட்டும்?" என்று ஒரு நேயர் எழுதுகிறார்.

மேற்படி நிருபரின் மனைவி தன் கணவனைத் தன்னிடம் அன்பும் அநுதாபமுமுள்ளவ ரென்றும், தனக்கு முக்கியமான விஷயங்களில் ஆலோசனை சொல்லி உதவி செய்வரென்றும் எண்ணியிருக்கிறாள். இது எப்படித்தவறாகும்? உண்மையில் மனைவி இத்தகைய மனப்பான்மைதான் கொண்டிருத்தல் வேண்டும்.

தன்னிடம் இத்தனை நம்பிக்கை வைத்திருக்கும் மனைவியைக் குறித்துக் கணவன் நியாயமாகப் பெருமை கொள்ளவேண்டும். அதை விடுத்து எரிச்சலும் பொறுமையின்மையும் கொள்ளுதல் தவறாகும்.

குழந்தைகளின் கவனிப்பு, அவர்களுடைய படிப்பு, சமையல் சாப்பாடு, அணிமணிகள், வீட்டுக் காரியங்கள், வருவோர் போவோர் கூறிய விஷயங்கள் முதலியவைதான் சாதாரணமாகப் பெண்களின் வாழ்க்கையில் முக்கியமானவை. இவை சம்பந்தமாகவே அவர்களுடைய கஷ்டங்கள், சோதனைகள் எல்லாம் ஏற்படுகின்றன. சில சமயம், அவர்களுக்குப் பேச வேறு விஷயங்களே இரா. இருப்பினும் இவைகளைப்பற்றிப் பேசவே விரும்புவார்கள். அப்படியானால் தன்னுடைய அன்புக்கும்நம்பிக்கைக்கும் உரிய ஒருவனிடம்அல்லாது வேறு யாரிடம் ஒரு ஸ்திரீ தன் இருதயத்தைத் திறந்து பேசுவாள்?

ஆயினும், மனைவிமாருக்கும் ஒருவார்த்தை சொல்ல விரும்புகிறேன். இவ்விஷயத்தில் அளவுக்கு மீறி அவர்கள் போய்விடக் கூடாது. ஒரு மனிதன் தன் காரியாலயத்திலிருந்தோ, கடையிலிருந்தோ, தொழிற்சாலையிலிருந்தோ திரும்பும் போது தன்னுடைய கவலைகளை யெல்லாம் அவ்விடங்களிலேயே விட்டுவர விரும்புதல் இயல்பு. வீட்டிலேனும் அமைதியும், சந்தோஷமும் காணலாமென்று அவன் எதிர்பார்த்தல் நியாயமே யாகும்.

ஆனால், இப்படி மனைவியின் காரியங்கள் என்றும், கணவன் ஜோலிகள் என்றும் பிரித்து இடையில் சுவர் எழுப்பி விடுவதும் தகாது. இல்வாழ்க்கையில் மகிழ்ச்சி விரும்புவோர் இம்முறையைக் கையாளலாகாது. கணவனும் மனைவியும் ஓரளவுக்குட்பட்டு ஒருவர் காரியங்களை ஒருவரிடம் சொல்லுதலும், யோசனை கேட்டலுமே ஒழுங்காகும்.

ஒரு மனைவி தன் கணவன் விஷயத்தில் சிரத்தை கொண்டிருக்கிறாள். அவனை நம்புகிறாள். தன்னுடைய கவலைகள், தொல்லைகள் எல்லாவற்றையும் அவன் காதில் போட்டுவிட்டால் அவற்றின் பாரம் பெரிதும் நீங்கிவிடுவதாக நினைக்கிறாள். இத்தகைய மனைவி கொஞ்சம் நச்சுவாய் உள்ளவளாயினும், அவளைக் கண்டிப்பது அறிவீனமாகும்; பாவமாகும்.

அதைவிடக் கணவன் ஏன் "பழிக்குப் பழி" வாங்கக் கூடாது? அவன் தன்னுடைய இறுமாப்பை விட்டொழித்துத் தன் காரியங்கள், கவலைகள் முதலியவற்றை அவளிடம் ஏன் சொல்லக்கூடாது? "நீ உன் காரியத்தைப் பார். என் விஷயங்களைப் பற்றிக் கவலை வேண்டாம்" என்னும் மனப்பான்மை நலந்தருவதன்று.

வெளி விவகாரங்களில் கூடச் சில சமயம் மனைவியிடம் சிறந்த யோசனை பெற்ற மனிதர்கள் எத்தனையோபேர் உண்டு. மற்றும், கஷ்டங்களை எப்போதும் பிறரிடம் சொன்னால் அவற்றின் பாரம் அரைவாசி குறைந்து விடுதல் அநுபவம். உண்மையில் இத்தகைய பழிவாங்கும் முறையைக் கையாளுவதால், மேற்படி நிருபர் தெரிவித்துள்ள குறையும் நிவர்த்தியாகும். அன்புள்ள மனைவியிடம் கணவன் தன்னுடைய காரியங்களையும், கஷ்டங்களையும் பற்றிப் பேசத் தொடங்கும்போது, அவற்றில் உள்ளத்தைப் பறிகொடுத்துவிடும் மனைவி, தன் சொந்தக் கவலைகளை அநேகமாக மறந்தே விடுவாள்.

"டிட்பிட்ஸ்"

## அறிவுத் துணுக்குகள்

### மாம்பழம் எங்கிருந்து வருகிறது?

மாங் கொட்டை ஒன்றைத் தரையில் ஊன்றி நீர் ஊற்றி வந்தால், விரைவில் முளைகிளம்பிச் செடியாகி, மரமாகிக் கணக்கற்ற பழங்களைத் தருகின்றது. ஆனால் இவை யெல்லாம் எங்கிருந்து வருகின்றன? மற்றோர் உதாரணம் எடுத்துக்கொள்வோம். ஒரு வீசை உருளைக் கிழங்கு விதைகளைப் போட்டால் பத்து வீசை உருளைக் கிழங்கு மகசூல் நமக்குக் கிடைக்கிறது. ஒன்பது வீசை அதிக உருளைக்கிழங்கு எங்கிருந்து வந்தது? இதனால் பூமி தன் நிறையில் ஒன்பது வீசை அதிகமாயிருக்குமா? அவ்வாறே மாம்பழங்கள் பூமிக்கு அதிக கனம் அளித்திருக்கின்றனவா? இதற்கு விடை "இல்லை" என்பதேயாகும். பூமியில் ஏற்கனவே உள்ள பொருள்களே உருளைக் கிழங்காகவும் மாம்பழமாகவும் ஆயினவே அல்லாது வேறில்லை. செடி அல்லது மரம் தன்னைச் சுற்றித் தரையிலும் நீரிலும் ஆகாயத்திலும் உள்ள சிற்சில சத்துக்களை எடுத்தே பழங்களாக்குகின்றது. இது ஒரு வீடுகட்டுவதைப் போலத்தான். தரையிலிருந்து மண் எடுத்துக் கற்கள் செய்து வீடுகட்டினால் பூமியின் கனம் அதனால் குறைவதோ, மிகுவதோ கிடையாது. பூமியில் ஒருபகுதி வீடாயிற்றே யல்லாது வேறில்லை. மரஞ் செடிகள், மனிதர்கள், பிராணிகள் எல்லாருடைய விஷயத்திலும் இதுவே உண்மையாகும்.

* * *

### பூமி எப்போதும் ஒரே கனமுள்ளதா?

அநேகமாக அப்படித்தான். ஆனால் இது முழுவதும் உண்மையன்று. வருஷந்தோறும் பூமியின் கனம் சிறிதளவு அதிகமாகி வருகிறது. ஏனெனில் ஆகாய வெளியில் உலவிக் கொண்டிருக்கும் சிற்சில கற்கள் பூமியின்மீது அவ்வப்போது விழுகின்றன. இவைகளையே "எரி நட்சத்திரங்கள்" என்கிறோம். இவை எக்காலத்தும் பூமியைச் சேர்ந்தவையா யிருந்ததில்லை. பூமி ஆகாய வெளியில் சுற்றும்போது சில சமயம் அக்கற்களுக்கு அருகில்வருகிறது. அப்போது பூமியின் ஆகர்ஷண சக்தியினால் இழுக்கப்பட்டு அவை பூமியில் விழுகின்றன. இதனால் பூமியின் கனம் சிறிதளவு அதிகமாவதுண்டு. ஆனால் பூமியின் கனம் எவ்வகையிலும் குறைவதுமட்டும் கிடையாது. ஏனெனில் தன்னிடமுள்ள எல்லாப் பொருள்களையும் அது ஆகர்ஷண சக்தியினால் தன்னிடமே வைத்துக் கொண்டிருக்கிறது. ஒரு காலத்தில் பூமியிலிருந்து ஒரு துண்டு சிதறி விழுந்ததென்றும், அதுவே சந்திர மண்டலம் என்றும் கூறுகிறார்கள். ஆனால் இதைப்பற்றி நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை.

* * *

### வாத்துக்குஞ்சு எப்படி நீந்தக் கற்றுக்கொள்கிறது?

தாய் சொல்லிக் கொடுத்தா? தன் இயற்கை யறிவினலா? இரண்டும் ஓரளவு காரணங்களாகும். தண்ணீரையே பார்த்திராத சில வகைப்பூச்சிகளைத் தண்ணீரில் போட்டால் அவை நன்றாய் நீந்துகின்றன. இவை விஷயத்தில் முழுதும் இயற்கை யறிவே உதவிசெய்கின்றது. சிறிது உயர்ந்த தரத்தைச் சேர்ந்த பிராணிகள் மனிதர்களை விட எளிதில் நீந்தக்கற்றுக் கொள்ளக்கூடும். இவற்றிற்கும் பெரும்பாலும் யாரும் சொல்லிக்கொடுப்பதில்லை. ஆனால் குஞ்சு தன் தாய் நீந்துவதைப் பார்ப்பதினாலும், அதனால் தைரியங்கொண்டும் நீந்தத் தொடங்குகிறது. பின்னர் அதற்கு இயற்கை யறிவு துணைசெய்கிறது. மனிதர்கள் கூட யாருஞ் சொல்லிக் கொடாமலே இயற்கை யறிவு கொண்டு ஒரு வகையாக நீந்த முடியும். ஆனால் அவர்கள் பயமடைந்து விடுவதால் கையை மேலே வீசுகிறார்கள். இது உடம்பின் கனத்தை அதிகமாக்குவது போன்றதாதலால் மூழ்கி விடுகிறார்கள்.

* * *

### நாம் களைப்புறுவது ஏன்?

இரண்டு காரணங்கள் உண்டு. நாம் வேலை செய்யும்போது உடம்பின் உபயோகத்துக்காகவேண்டிய உணவுப்பொருள் செலவழிந்து விடுவதால் களைப்பு ஏற்படக்கூடும். ஆனால் சாதாரணமாக மக்கள் களைப்புறுவது இக்காரணத்தினால் அன்று. உடம்பில் உணவுப் பொருள் இன்னும் இருக்கையிலும் களைப்புறுகிறார்கள். வேலை செய்யுங்கால் உடம்பில் ஏற்படும் மாறுதல் களினால் சில விஷப் பொருள்கள் உற்பத்தியாகின்றன. இவையே களைப்பை உண்டாக்கின்றன. உடலினால்உழைத்துவேலைசெய்யும்போதும் மூளையே அதிக களைப்புறுகிறது என்று கண்டுபிடித்திருக்கிறார்கள். ஏனெனில் மேற்படி நச்சுப்பொருள்கள் மூளைக்கேறிவிடுகின்றன. களைப்புற்ற ஒரு நாயின் இரத்தத்தில் சிறிதெடுத்துக் களைப்பில்லாத நாயின் உடலில்ஏற்றினால் பின்னதும் களைப்பின் அறிகுறிகள் காட்டத் தொடங்குகிறது. காரணம், மேற்படி இரத்தத்திலடங்கிய விஷம் மூளைக்கேறியதே யாகும்.

* * *

### மூச்சு வாங்குவது ஏன்?

மனிதனுடைய உடம்பில், களைப்பு என்பதே யின்றி இடைவிடாமல் வேலைசெய்யும் உறுப்பு இதயம் ஒன்றே யாகும். மனிதன் உயிரோடிருக்கும் வரையில் இதயம் அடித்துக் கொண்டேயிருக்கிறது. இரண்டு அடிப்புகளுக்கிடையே அது சிறிது ஓய்வு பெறுகிறது. நாம் சுகமாயிருக்கும் வரையில்- இதயத்தைச் சரியாய் நடத்தும் வரையில்- இந்த ஓய்வே அதற்குப் போதும். ஆனால் நாம் வேகமாக ஓடும்போதும், நீந்தும் போதும், இன்னும் இது போன்ற காரியங்கள் செய்யும் போதும் இதயத்துக்கு அதிகப்படி வேலை கொடுக்கிறோம். இதயத்தைப் பற்றிய ஒரு பெரிய விசேஷ மென்னவென்றால், அதிகப்படி உழைப்புக்கு ஈடு கொடுக்குமாறு அது கையிருப்பில் ஏராளமான சக்தி சேகரித்து வைத்துக் கொண்டிருக்கிறது. மனிதர் மூச்சுவாங்கத் தொடங்கும் போது இந்தசக்தியை இதயம் உபயோகப்படுத்துவதற்கு அது அறிகுறியாகும். ஆனால் அளவுக்கு மீறி ஓடுவதாலும் வேறு வேலை செய்வதாலும் இதயத்தைக் கெடுத்துக் கொண்டுவிடலாம். ஓடும் போது நாம் ஏராளமான காற்றை உட்கொள்கிறோம். அப்போது அதிலுள்ள பிராணவாயுவை எடுத்துக் கொள்ளும் பொருட்டு அதிவேகமாக இரத்தம் நுரையீரலில் பாயவேண்டியிருக்கிறது. இதனாலேயே இதயம் அதிவேகமாக அடிக்கிறது. கடைசியாக, அதனுடைய கையிருப்புச் சக்தி செலவழியுந் தறுவாயில் மூளைக்கு ஒரு செய்தி யனுப்புகிறது. அதாவது மூச்சுவாங்கும்படி செய்கிறது. நாம் புத்திசாலிகளாயின் இதை எச்சரிக்கையாகக் கொண்டு ஓடுவதை நிறுத்தி விடுவோம். ஆனால் அறிவில்லாத சிறுவர்கள் அப்புறமும் ஓடுவதுண்டு. இதனால் அவர்கள் மூர்ச்சை யடைந்து விழுகிறார்கள்.

* * *

### மூர்ச்சை யடையுங்கால் என்ன நேரிடுகிறது?

மூர்ச்சையடைதல் என்பது மிகவும் அதிசயமான ஒருவிஷயமாகும். அப்போது உடம்பில் மிக அழகான ஒரு காரியம் நிகழ்கிறது. இதயம் அளவுக்கு மீறிய வேலையினால் மூளைக்கு இரத்தம் அனுப்புவதை நிறுத்தும்போது, மூளை வேலை செய்தல் நின்றவிடவே மனிதன் ஸ்மரணை யிழந்து கீழே விழுகிறான். இப்போது அவனைச் சரியான நிலைக்குக் கொண்டு வருவதற்குச் செய்ய வேண்டியதும் இதுவேயாகும். இதிலே தான் இயற்கையின் ஆற்றல் விளங்குகிறது. பூமியின் ஆகர்ஷண சக்தி எல்லாவற்றையும் கீழ்நோக்கி இழுக்கிறதென்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? நீங்கள் நிற்கும்போதும், உட்கார்ந்துள்ள போதும் உங்கள் இதய இயந்திரம் மேற்படி ஆகர்ஷண சக்தியை மீறிக்கொண்டு இரத்தத்தை மேலே மூளைக்குச் செலுத்த வேண்டியிருக்கிறது. ஆனால் மூர்ச்சையடைந்த மனிதன் கீழே விழுந்ததும், மூளைக்கு இரத்தம் அனுப்பும் வேலை இதயத்துக்கு எளிதாகிவிடுகிறது. விரைவில் மூளை போதிய இரத்தம் பெறவே, மனிதன் உணர்வுபெற்று எழுகிறான். இதயத்துக்கு ஏதேனும் பலமான கெடுதல் ஏற்பட்டிருந்தாலன்றி அவன் முன்போலவேயாகிறான். எனவே, மூர்ச்சையாய்விழுதல்என்பது "நெருக்கடி"யைத்தீர்ப்பதற்குஇயற்கையாளும்முறையேயாகும்.

* * *

### மூர்ச்சை யடைந்தவனைத் தூக்கி நிறுத்தலாமா?

இவ்வியற்கை நுட்பத்தை அறியாதவர்கள் மூர்ச்சை யடைந்தவனைத் தூக்கி நிறுத்த முயல்கிறார்கள். இது இயற்கையின் அழகான சிகிச்சை முறைக்குக் குறுக்கே நிற்பதல்லாமல் வேறொன்றுமில்லை. இதனால் மூளைக்கு இரத்தம் கிடைப்பது மிகவும் கஷ்டமாகும்படி அவர்கள் செய்கிறார்கள். மூர்ச்சை யடைந்தவன் விரைவில் உணர்வு பெறுமாறு இயற்கைக்குத் துணைசெய்ய விரும்பினால், அவனுடைய கால்களைப் பிடித்துத் தூக்குதல்தான் சரியான முறையாகும். அப்போது இரத்தம் கால்களுக்குச்சென்று வீணாகாமல், மூளைக்கு ஏராளமாகச்செல்லும். மூளைபோதிய இரத்தம் பெற்றதும் அவன் மூர்ச்சை தெளிந்தெழுந்திருப்பான்.

## உதிர்ந்த மலர்கள்

ஸர் தேஜ் பகதூர் சப்ரூ :—இந்த 1928-ம் ஆண்டில் பெண்களுக்கு எட்டாம் வயதில் கலியாணம் செய்துவிட வேண்டுமென்று சொல்வோரும், அதற்காதாரமாகப் பழைய சாஸ்திர ஆதாரங்களை எடுத்துக் காட்டுவோரும் இருப்பது பெரிதும் வருந்தற்குரியதாகும். உண்மையில் சாஸ்திரங்கள் இப்படிச் சொல்லுமானால் அச்சாஸ்திரங்களை எவ்வளவு சீக்கிரத்தில் தொலைத்துத் தலை முழுகுகிறோமோ அவ்வளவுக்கு நல்லது.

* * *

இந்தூர் மகாராணி சந்திரவதிபாய் ஹோல்கார் :—திருவிழா முதலிய காலங்களில் நமது உடல்களைப் பகட்டான ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துக் கொண்டு வெளியே போக நமது புருஷர்கள் அநுமதிக்கிறார்கள். இதில் அவர்களுடைய நோக்கம் என்ன? தங்களுடைய செல்வத்தையும் அந்தஸ்தையும் உலகுக்கெல்லாம் பறை யடிப்பதே யாகும். இதையே நாம் நமது வாழ்க்கையின் பரமானந்தமாகக் கருதி ஏமாறுகிறோம்.

* * *

மிஸ்டர் பிராங்கேன்:— இது காறும் மக்கட் குலம் கண்டு பிடித்திருக்கும் மருந்துகளுக்குள்ளே மிகச்சிறந்தது சிரிப்பாகும். ஒரு முறை வயிறுகுலுங்கும்படி சிரித்தல் பத்து வண்டி மூலிகைகளையும், எழுமருந்துக்கடைகளில் உள்ள ஔஷதங்களையும் விடச் சிறந்த குணந்தரும்.

* * *

ஆண்ட்ரூ கார்னிகி (அமெரிக்கக் கோடீசுரர்):— என வியாபாரத் தலங்களில் எவன் குப்பைகூட்டும் அடப்பத்தைக் கையெடுக்க நாணமடைகிறானோ, அவன் தொழிலில் முன்னுக்கு வரத் தகுதி யற்றவனென்று தீர்மானித்திருக்கிறேன்.

* * *

டாக்டர் அன்னிபெசண்ட் :— லாலாஜி தேச நலத்திற்காக ஆத்ம தியாகியாகி மகோன்னத மாணமடைந்தார். இரக்கமற்ற கைகளினால், மார்பில் பட்ட அடி அவர் மரணத்தைத் துரிதப் படுத்தியது என்பதில் ஐயமில்லை. லாலாஜி சுயராஜ்ய சூரியன் வரவை முன் அறிவித்த உதய தாரகை யாவார். மரணத்திற்குப் பின் வாழ்க்கையுண்டென்பது உண்மையானால், அவர் தற்போது விடுதலை யிழந்த இந்தத் துர்ப்பாக்கிய நாட்டிற்கு ஆசி கூறிக்கொண்டு இந்திய வானத்தில் விளங்குகிறார் என்பதில் ஐயமில்லை.

* * *

ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் :—பாரதி பாடல்கள் அரசியலையும், சாதி சமயங்களையும் கடந்து நிற்பவை; இந்தியாவின் மறு மலர்ச்சியைச் சங்கநாதம் செய்து அறிவிப்பவை. தேசிய புனர் நிர்மாணம் ஆக வேண்டுமானால், தமிழ் மக்கள் அப்புனர் நிர்மாணத்தில் பங்குபெறவேண்டுமானால், தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு சிறுவன், சிறுமியின் கையிலும் பாரதி பாடல்கள் அளிக்கப்பட வேண்டும்.

* * *

மேற்படியார் :—சென்ற இருபதாண்டுகளில் தமிழ் நாட்டில் மிகச்சிறந்த நிர்மாணத் தொண்டு செய்தவர் ஸ்ரீமான் சுப்பிரமணிய பாரதியாரே யாவார். அவர் செய்த ஊழியம் ஜனங்களுக்கு நீடித்துப் பயன்படக் கூடியது. அரசியல் துறையில் மட்டுமன்றி வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் முன்னேற்ற தாகத்தை உண்டு பண்ணியவர் ஸ்ரீ பாரதியார்.

* * *

ஸ்ரீ ஹரீந்திரநாத் சட்டோபாத்தியாயர்:—ருஷியாவில் ஜனங்களுக்கு அறிவூட்டும் துறையில் நாடக மேடை மிகவும் பயன் பட்டு வருகிறது. மாஸ்கோ, லெனின் கிராட் என்னும் நகரங்கள் ஒவ்வொன்றிலும் 5000 நாடகக் கொட்டகைகள் இருக்கின்றன. சோவியத் அரசாங்கத்தார் தங்கள் சைன்யத்துக்கு எவ்வளவு செலவிடுகிறார்களோ அவ்வளவு நாடகங்களுக்குச் செலவு செய்கிறார்கள்.

* * *

பிரான்ஸிலுள்ள வாலன்ஸ் என்னு மிடத்தில் கொலைக்குற்றத்திற்காக விசாரிக்கப்பட்ட ஒரு கைதியைப்பார்த்து நீதிபதி "நீ என்னுடைய பீடத்தில் நீதிபதியாயும், நான் உன் நிலையில் கைதியாகவும் இருந்தால் நீ எனக்கு என்ன தண்டனை அளிப்பாய்?" என்று கேட்டாராம். அதற்குக் கைதி "நான் கொலை செய்தேன். ஆதலின் கொலை செய்யப்பட உரியவன். ஆதலின் என்னைக் கொன்று விடுங்கள்" என்று பதிலிறுத்தானாம். கைதிக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்
சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்
லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி
வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப
மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை
யான சங்கரனற் சங்கவெண் குழையோர்
காதிற், கோமாற்கே நாமென்று மீளாவா
ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி
னோமே.—(அப்பர்.)

சென்னை 1928ஹு டிசம்பர்மீ 5வ

## கல்கத்தா காங்கரஸ்

கல்கத்தா காங்கரஸ் மிக நெருக்கடியான காலத்தில் கூடுகிறது. நெருக்கடியெனில் ஒரு வழியிலா - அந்தோ - பலவழியிலும்! சுயேச்சைக் கூட்டத்தார் ஒரு பக்கமும், சர்வகட்சி மகாநாட்டார் மற்றொரு பக்கமும், வகுப்புவாதிகள் இன்னொரு பக்கமும் நின்று கல்கத்தா காங்கரஸை நெருக்க முயன்று வருகிறார்கள். இத்துணை இடுக்கணிடைக் கல்கத்தா காங்கரஸ் தன் கடனாற்றல் வேண்டும்.

காங்கரஸ் கூடப்போகும் இடத்தைப் பற்றி விரித்துரைக்க வேண்டுவதில்லை. அவ்விடம் தேசபக்தி ததும்பும் ஓரிடம் என்பதில் ஐயமில்லை. காங்கரஸ் நடைமுறை யொழுங்கு சிற்சில சமயங்களில் அது கூடுமிடத்தையும் பொறுத்து நிற்றலுண்டு. இம்முறை காங்கரஸ் கூடுங் கல்கத்தா எல்லாப் பிணக்குகளையும் விழுங்கி ஒரு நல் வழி காட்டுமென்று நம்புகிறோம். இங்கே தேசபந்துவின் நினைவு தோன்றுகிறது.

கல்கத்தா காங்கரஸில் தலைமை வகிக்கப்போகும் பண்டித மோதிலால் நேரு நாடறிந்த ஒருவர். இவர் முன்னொருமுறை அமிர்த சரஸில் 1919-ம் ஆண்டு கூடிய காங்கரஸில் தலைமை வகித்தவர். பண்டித நேரு திறமை வாய்ந்தவரென்பதை எவரும் மறுத்துக் கூறார். இவரை மாகாணக் காங்கரஸ் கூட்டங்கள் தெரிந்தெடுத்தவேளையில், அத்தெரிவினை நாம் மறுத்துக் கூறியது நேயர்கள் நினைவிலிருக்கும்.

பண்டித நேருமீது நமக்கு எவ்வித காழ்ப்புமில்லை. பண்டிதரிடத்து நமக்கு அன்புண்டு. நாடு உற்றுள்ள நிலையில் மகாத்மாகாந்தி தலைமை வகித்தல் சிறப்பு என்று நமக்குத் தோன்றிற்று. மாகாணங்களிற் பெரும்பான்மையன பண்டித நேருவைத் தெரிந்தெடுத்து விட்டன. நேரு திட்டம் வெளிவந்த பின்னைச் சுயேச்சை வாதிகளின் கிளர்ச்சி கண்டு பண்டித மோதிலால் நேரு தம்மீது நம்பிக்கை யிருத்தலை மீண்டு மொருமுறை தெரிவிக்குமாறு மாகாணக் காங்கரஸ் கூட்டத்தாரைக் கேட்டுக் கொண்டார். அவர் விரும்பிய அந்நம்பிக்கையை மீண்டும் பெற்றுக் கொண்டார். இதைப்பற்றியும் நமக்கு வெறுப்பில்லை. ஆனால்ஈண்டொன்றுகுறிக்க விரும்புகிறோம். பண்டித நேரு மீண்டும் நம்பிக்கையை எதிர்பார்த்ததை விடத் தாம் தலைமைப் பதவியினின்றும் விலகியிருக்கலாம் என்பதே நாம் குறிக்க விரும்புவது. சர்வகட்சி மகாநாட்டின் நிகழ்ச்சி முறை வெளிவந்த நாள்தொட்டு இந்திய முஸ்லீம் உலகில் பலதிறக் கருத்து வேற்றுமைகள் தோன்றி வருகின்றன. இந்நிலையில் காங்கரஸில் ஒரு முஸ்லீம் தேசபக்தர் தலைமை வகிப்பதே சிறப்புடைத்தென்பது நமது கருத்து.

இப்பொழுது காங்கரஸ் எந்நிலையிலிருக்கிறது? பழைய வாசனையையொட்டிக் கூட்டங் கூடி வருகிறது. அக்கூட்டத்தில் உயிருண்டா என்பதொன்றே கருதற்பாலது. சென்ற ஆண்டு சென்னையில் கூடிய காங்கரஸ் உயிரற்றதாய் நிலவியதைக் காந்தியடிகள் உள்ளிட்ட பெருந் தலைவர்கள் விளக்கிக் காட்டினார்கள். சென்னைக் காங்கரஸ் ஒரு பக்கம் பிரிட்டிஷ் சாமான்களுக்கு இடந் தந்து, மற்றொரு பக்கம் சுயேச்சைத் தீர்மானம் நிறைவேற்றியதைப்பற்றி நாடு எள்ளி நகையாடிற்று. பரதேசீயத்தில் சென்னையின் அடிச்சுவட்டைப் பற்றக் கல்கத்தாவும் விழைந்தது. தலைமை வகிக்கப் போகும் பண்டித மோதிலால் நேரு "எல்லாங் கதர் மயமாய் இருத்தல் வேண்டும்" என்று வேண்டுதல் செய்ததை யொட்டிக் கதர் காட்சிச் சாலையமைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதைக் கேட்டு நாம் மகிழ்வெய்துகிறோம். இது குறித்துப் பண்டித மோதிலால் நேருவிற்கு நமது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

காங்கரஸ் தற்போது ஒரு கட்சி அமைப்பா யிருத்தல் கண்கூடு. காங்கரஸ் சிற் சில வேளைகளில் ஒரு கட்சி அமைப்பாக மாறலாம். எப்பொழுது காங்கரஸ் அந்நிலை யுறலாம்? நாட்டில் உரிமை வேட்கை எழுப்பவல்ல ஒரு திட்டத்தைக் காங்கரஸ் ஏற்கும்போது அஃதொரு கட்சியமைப்பாவதில் நாட்டுக்குக் கேடில்லை. ஒத்துழையாத் திட்டத்தைக் காங்கரஸ் ஏற்றபோது காங்கரஸ் ஒரு கட்சியமைப்பாகவே நிலவிற்று. அதனால் நாட்டில் எழுந்த உரிமை வேட்கைக்கு அளவேயில்லை. இந்நாளில் காங்கரஸில் அத்தகைத் திட்டம் ஏதாயினும் ஒன்றிருக்கிறதா? இல்லை. இப்பொழுது காங்கரஸ் ஏன் ஒரு கட்சியமைப்பாய்ச் சிறுமையுறல் வேண்டும்? சட்டசபை வேட்டையையும் பிற வேட்டைகளையும் காங்கரஸ் நாடியுள்ள இவ்வேளையில், காங்கரஸ் ஒரு கட்சி யளவில் கட்டுப்பட்டுக்கிடப்பது பொருளற்றவொன்றாகும். காங்கரஸ் ஒத்துழையாமை போன்ற ஓர் இயக்கத்தை ஏற்று நாட்டைத் தட்டியெழுப்புதல் வேண்டும் அல்லது அஃது எல்லாக் கட்சிக்குமுரிய தேச மகா சபை யாதல்வேண்டும். இரண்டுக்கும் இடந் தாராது காங்கரஸ் கிடக்குமாயின் நாளடைவில் அதன் நிலை குலைந்து விடுதல் ஒருதலை.

கல்கத்தாவில் கூடப் போகும் காங்கரஸில் முதலாவது எழப் போகும் அலை சுயேச்சை அலை. சுயேச்சை வேண்டாமென்று இந்தியாவில் பிறந்த எவருங் கூறார்; காங்கரஸ் அதை இலட்சியமாகக் கொள்வதிலுந் தவறில்லை. "இப்பொழுதே அது வேண்டும்" என்று சொல்வது வீண் ஆரவாரமே யாகும். சுயேச்சைக் கூச்சலிடுவோர் சுயேச்சைக் குரிய திட்டம் ஏதாயினும் வகுத்து நாட்டைத் தட்டியெழுப்புகிறாரா எனில் அஃது மில்லை. சட்ட சபையையும் வக்கீல் வேலையையும் மனதிற் கொண்டு சுயேச்சைக் கூச்சலிடுவது வெறும்போலியேயாகும். இப்போலி வழியில் காங்கரஸை ஈர்ப்பது காங்கரஸை அழிப்பதாகும். "சென்னையில் காங்கரஸ் சுயேச்சைத் தீர்மானம் நிறைவேற்றி யிருக்கிறதே. என்செய்வது? அதை நெகிழ விடுவதா?" என்று சிலர் கருதலாம். சுயேச்சை யென்னுஞ் சொல் தீர்மானத்திலிருக்கலாம். அதை இலட்சியமாகக் கொண்டு தற்போது எல்லாக் கட்சியாரும் ஒப்பத்தக்க ஒரு திட்டத்தைக் கொள்வது அறிவுடைமை. கல்கத்தா காங்கரஸ் இவ்வழி காட்டுமென்று எதிர்பார்க்கிறோம்.

காலதேச வர்த்தமானங்களை யுற்று நோக்கும்போது, சர்வகட்சி மகாநாடு கோலிய நேரு திட்டத்தை ஆதரிப்பது நலமென்று தோன்றுகிறது. நேரு திட்டத்தில் குறையில்லை யென்று சொல்ல முடியாது. அதன்கண் குறையுண்டு. குறையில்லா முறையில் ஒரு திட்டத்தை யொழுங்குபடுத்தும் நிலையில் நாடில்லை. என் செய்வது? நாடுள்ள நிலையில் நேரு திட்டத்தினுஞ் சிறந்த ஒன்று கோலுதல் மிக அருமை. நிலைமை நோக்கி நேரு திட்டத்தை ஆதரிப்பது தேசபக்தியாகும்.

கல்கத்தா காங்கரஸில் வகுப்புவாதந் தலை காட்டுமென்று ஊகிக்கலாம். நேரு திட்டத்தைப்பற்றி முஸ்லீம் உலகில் இருபிளவு ஏற்பட்டிருத்தல் நேயர்கட்குத் தெரியும். மௌலானா அபுல்கலாம் அஸாத் முதலியோர் நேரு திட்டத்தை ஆதரிக்கிறார்; மௌலானா ஷாக்குத் அலி முதலியோர் அத்திட்டத்தை ஆதரிக்கிறாரில்லை. நேரு திட்டத்தை ஆதரிக்க மௌலானா அபுல்கலாம் அஸாத்துக்கு எவ்வளவு உரிமையுண்டோ அவ்வளவு உரிமை அத்திட்டத்தை மறுக்க மௌலானா ஷாக்குத் அலிக்குமுண்டு. மௌலானா ஷாக்குத் அலி நேரு திட்டத்தை மறுப்பதைக் காரணமாக் கொண்டு, ஹிந்து இளைஞர்கள், லஜபதிராய் பிரிவாற்றாமை குறித்துப் பம்பாயில் கூடிய ஒரு கூட்டத்தில், மௌலானா நுழைந்தபோது "வெட்கம் வெட்கம்" என்று கூச்சலிட்டது தேச பக்தியாகாது. மௌலானா ஷாக்குத் அலி நேரு திட்டத்தில் முஸ்லீம்கட்குக் கெடுதல் உண்டு என்று நம்புகிறார். அதைக் கரவின்றி அவர் வெளியிடுகிறார். இது கருத்து வேற்றுமை. இக்கருத்து வேற்றுமைக்கு மதிப்புக் கொடுத்து அவருடன் கலந்து வேண்டுவ செய்வது அறிவுடைமை. பெருந் தேசபக்தருந் தியாகியுமாகிய அவரைப் பார்த்து "வெட்கம் வெட்கம்" என்று கூச்சலிடுவது சிறுமையேயாகும். பம்பாய்க் கூட்டத்திலிருந்த ஹிந்து இளைஞர்கள் மூடச் செயல் நேருதிட்டத்துக்கு ஆதரவளித்த சில முஸ்லீம்களையும் அநாதரவு செய்யத்தூண்டி யிருக்கிறது. பொறுப்பற்ற இளைஞர்களின் ஆவேசம் சில வேளைகளில் பெருந் துன்பம் விளைத்து விடுகிறது. மௌலானா ஷாக்குத் அலி லஜபதிராயுடன் சில வற்றில் கருத்து வேற்றுமையுடையவர். அக்கருத்து வேற்றுமை பாராட்டாது, தேச காரியத்தில் லஜபதி செய்துள்ள நலங்கருதித் தந்துயரத்தை வெளியிடப் போந்த மௌலானா ஷாக்குத் அலியின் பெருந் தகைமையைப் பாராட்டிப் போற்றுதற்குப் பதிலாக "வெட்கம் வெட்கம்" என்று பொறுப்பற்ற இளைஞர்கள் ஊளையிட்டது மடமை.

நேரு திட்டத்தைப்பற்றி முஸ்லீம் உலகில் ஏற்பட்டுள்ள பிளவை ஒன்றுபடுத்த முயலல் வேண்டும். மௌலானா அபுல்கலாம் அஸாத்தும் அவர் உள்ளிட்டாரும் மௌலானா ஷாக்குத் அலியும் அவர் உள்ளிட்டாருங் காங்கரஸ் கூடுதற்கு முன்னர் ஓரிடத்தில் கூடிப் பேசி ஒருநன்முடிவிற்கு வருதல்நலம். இவ்விருவர்க்குள்ளும் ஒரு நன்முடிவு ஏற்படாதொழியுமேல் நேரு திட்டத்தின் ஆக்கம் சிறிது குறைபாடடையு மென்று சொல்லப் பெரிதும் வருந்துகிறோம். ஆண்டவன் திருவுளம்.

சைமன்குழு நடமாடிக் கொண்டிருக்கும் வேளையில் கல்கத்தாவில் காங்கரஸ் கூடப்போகிறது. இச்சமயத்தில் பாரதமக்கள் தங்களுக்குள்ள சிறு சிறு வேற்றுமைகளைப் பாராட்டாது, ஒல்லும் வகை முயன்று ஒருமைப்பட்டு வினையாற்றுவார்களாக.

## இடியேறு

### வருந்துகிறோம்

பஞ்சாப் அரசாங்கத்துக்காகவும், பஞ்சாப் சட்ட சபைக்காகவும் நாம் பெரிதும் வருந்துகிறோம். லாலாலஜபதிராயின் மரணத்துக்குப் பஞ்சாப் அரசாங்கமே பொறுப்பாளி யென்று நாடெங்கும் உணர்ச்சி இருந்து வருகிறது. இவ்வுணர்ச்சியைத் திவான் சமன்லால், டாக்டர் பெசண்டு அம்மையார் முதலியோர் தெளிவாக வெளியிட்டுள்ளார்கள். இந்நிலைமையில் பஞ்சாப் அரசாங்கத்தார் தங்களுடைய பொறுப்பைக் கழித்துக் கொள்வதற்கு, டாக்டர் முகமது ஆலம் ஓர் அரிய சந்தர்ப்பம் அளித்தார். அக்டோபர் 30 வ நிகழ்ச்சிகளைக் குறித்து விசாரிக்க உத்தியோகப் பற்றற்ற ஒரு கமிட்டியை நியமிக்கவேண்டுமென்று அவர் பஞ்சாப் சட்டசபையில் தீர்மானங் கொணர்ந்தார். அத்தீர்மானத்தின் மீது பேசுகையில் டாக்டர் முகமதுஆலம்இந்தியமகாஜனங்களின்கருத்தை நன்கு வெளியிட்டார். எனினும், அரசாங்கத்தார் இச்சந்தர்ப்பத்தை ஆவலுடன் ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாகத் தீர்மானத்தை எதிர்க்கத் தலைப்பட்டனர். பஞ்சாப் சட்டசபையும் தீர்மானத்தை நிராகரித்துவிட்டது. எனவே, வருங்காலத்தில் இந்திய சரித்திரத்தில் மாபெருந் தேசீயத் தலைவர் ஒருவரின் மரணத்துக்குப் பஞ்சாப் அரசாங்கத்தின் மீது பொறுப்புச் சுமத்தப்படின் - அதற்குப் பஞ்சாப் சட்டசபையும் உடந்தையாயிருந்ததாக எழுதப்படின் - எவரும் குறை கூறுவதற்கில்லை. இக்காரணத்தினாலேயே பஞ்சாப் அரசாங்கத்துக்காகவும், சட்ட சபைக்காகவும் நாம் வருந்துவதாகத் தலைப்பில் கூறினோம்.

### வஸு வாழ்க

ஸ்ரீஜகதீச சந்திரவஸுவின் 70-வது பிறந்ததினக் கொண்டாட்டம் சென்றவாரத்தில் நடைபெற்றது. அதுகாலை அவருக்கு வெளிநாட்டு அறிஞர்கள் பலர் வாழ்த்துரை அனுப்பியிருந்தார்கள். அவற்றுள் ஸ்ரீரோமேன் ரோலண்டு அனுப்பிய செய்தியை மற்றொரு பத்தியில் வெளியிட்டிருக்கிறோம். அதை நேயர்கள் ஊன்றிப்படிப்பார்களாக. இது காலை பாரத நாட்டுக்கு உலகில் பெருமையுண்டாகும்படி செய்து வரும் அருமைப்புதல்வர்கள் மூவராவர். அவர்கள் மகாத்மாகாந்தியும், ரவீந்திர நாதரும், ஜகதீச சந்திரருமே என்று சொல்ல வேண்டுவதில்லை. முதல் இருவரையும் போலவே ஸ்ரீஜகதீச சந்திரரும் தேசபக்தியிலும் பாரமார்த்திகப்பற்றிலும் தலை சிறந்தவராயிருப்பது பாரதத்தாயின் தவப்பயனேயாகும். அவர் பேசும் ஒவ்வொரு பேச்சிலும் தமது தாய்நாட்டின் பாரமார்த்திகப் பெருமையைக் குறித்து ஏதேனும் கூறாமலிருப்பதில்லை. "தங்களுக் கேற்படும் மகிமை ஆசியாவுக்கே மகிமையாகும்" என்று சீன மந்திரி அவருக்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் கூறுகிறார். இந்தியாவின் விஷயத்தில் இக்கருத்து இன்னும் அதிக பொருத்தமுடையது என்று சொல்லவும் வேண்டுமோ? "மகன்றந்தைக் காற்று முதவி இவன்றந்தை என்நோற்றான் கொல்லென்னுஞ் சொல்" என்னும் பொய்யா மொழிக்கு ஸ்ரீ ஜகதீச சந்திரர் இலக்ஷியமாக விளங்குகிறார். அவர் இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தாய் நாட்டின் மகிமையை வளர்க்குமாறு இறைவன் அருள் புரிவானாக.

### பத்திரிகை பகிஷ்காரம்

சைமன் கமிஷன் பகிஷ்காரத்தை ஆதரிக்கும் தேசீயப் பத்திரிகைகள் மேற்படி கமிஷன் விசாரணை விவரங்களைப் பத்தி பத்தியாக வெளியிடும் ஆபாசத்தைக் குறித்து இரண்டு திங்கட்கு முன்னரே நாம் எழுதியிருந்தோம். இத்தனை நாள்கழித்தேனும் நமது தலைவர்கள் இவ்விஷயத்தில் கவனம் செலுத்தி யிருப்பது குறித்து மகிழ்ச்சி யடைகிறோம். பண்டிதநேரு விடுத்திருக்கும் ஒரு விண்ணப்பத்தில், சைமன் கமிஷன் நடவடிக்கைகளையும், கமிஷன் முன்பு கொடுக்கப்படும் சாட்சியங்களையும் வெளியிட வேண்டாமென்று தேசீயப் பத்திரிகைகளைக் கேட்டுக்கொண்டிருக்கிறார். அகில இந்தியப் பத்திரிகாசிரியர் சங்கத்தலைவர் டாக்டர் அன்னிபெசண்டு அம்மையாரும் இக்கருத்துக் கொண்ட ஒரு விண்ணப்பம் விடுத்திருக்கிறார். ஏற்கனவே, பஞ்சாபில் சில பத்திரிகைகளும், கல்கத்தாவில் "பார்வர்டு." "அமிர்தபஜார்" "வஸுமதி" பத்திரிகைகளும் கமிஷன் நடவடிக்கைகளை வெளியிடுவதை நிறுத்திவிட்டன. சென்னைப் பத்திரிகைகளும் அவற்றைப் பின் பற்றித் தங்கள் தலையங்கங்களுக்கும், செய்திப் பத்திகளுக்கும் கூடிய விரைவில் பொருத்தம் ஏற்படுத்திக் கொள்ளுமென்று நம்புகின்றோம்.

### பாரதியார் பாடல்

பாரதியார் பாடல் பறிமுதலைக் குறித்துச் சென்னைச் சட்டசபையில் கேட்கப்பட்ட வினாக்களையும், விடைகளையும் மற்றொரு பத்தியில் வெளியிட்டுள்ளோம். விடைகள் திருப்தியளிப்பனவல்ல வென்று சொல்ல வேண்டுவதில்லை. சென்னை அரசாங்கத்தார் பர்மா அரசாங்கத்தின் கையாட்களாக ஏன் நடந்து கொள்ளவேண்டும்? "சென்னை அரசாங்கத்துக்கு இவ்விஷயத்தில் சுதந்திரமான அபிப்பிராயமே கிடையாது" என்னும் பதில் பொறுப்பைக் கழித்துக்கொள்ளப் பயன் பட்டாலும், பெருமை தருவதாகாது. போனது போக, இப்போது, ஹைகோர்ட்டில் போடப்பட்டிருந்த ஆட்சேப மனுவை பாரதி பிரசுராலயத்தார் வாபீஸ் வாங்கிக் கொண்டு விட்டபடியால், இனிமேல் சாக்குச் சொல்வதற்கு இடமில்லை. பறிமுதல் செய்யப்பட்ட புத்தகங்களைத் திருப்பிக் கொடுக்க உடனே உத்திரவிடப்படுமென எதிர்பார்க்கிறோம்.

### முன்னேற்றமா?

ஆப்கானி ஸ்தானத்து அரசர் தமது நாட்டின் முன்னேற்றத்துக்காகச் செய்துவரும் நன் முயற்சிகளைப் பாராட்டி நாம் பல முறையும் எழுதியுள்ளோம். ஆனால் கடைசியாக வந்துள்ள செய்தி உண்மையாயின் நாம் வருந்தாமலிருக்க முடியாது. காபூல் வாசிகளும், காபூலுக்கு வரும் வெளி நாட்டாரும் ஐரோப்பிய முறையில் உடையணிந்து தொப்பி தரிக்க வேண்டுமென்று அரசர் கட்டளை பிறப்பித்திருப்பதாக அச்செய்தி கூறுகிறது. நாட்டின் முன்னேற்றத்துக்கு இம்மாறுதல் எவ்வகையில் அவசியமென்பது நமக்குப்புலனாகவில்லை. நாகரீகஉடையணியும் முறை பெரிதும் தேக சுகத்தையும், சௌகரியத்தையும் அநுசரித்திருத்தல் வேண்டும். குளிர்மிகுந்தஐரோப்பிய நாட்டாரின் உடை, வெயில் தகிக்கும் இந்தியாவுக்கும் ஆப்கன் நாட்டுக்கும் சிறிதும் பொருத்தமானதன்று. எனவே, மேற்கூறிய செய்தி உண்மையாயின், ஆப்கன் அரசரின் ஐரோப்பியப் பிரயாணம் பல வகைகளில் நன்மை செய்திருப்பினும், இத்துறையில் தீமையே அளித்துளது என்று கூறுவோம்.

### கல்வி பரப்பும் வழி

துருக்கியில் எழுதப் படிக்கத் தெரியாதவர்களே இல்லையாகும்படி செய்வதற்குப் பெரு முயற்சி செய்யப்பட்டு வருகிறது. பற்பல தொழில்களிலும் இருக்கும் மத்திய தரவயதுள்ளவர்களுக்கும், கிழவர்களுக்கும் கல்வி யறிவு அளிப்பதற்காகத் துருக்கி பார்லிமெண்டார் நான்கு லட்சம் பவுன் அளித்திருக்கிறார்கள். ஒவ்வொரு பட்டணத்திலும், கிராமத்திலும் நான்கு மாத கால வகுப்புகள் நடத்தப் போகிறார்கள். குடியரசுத்தலைவர் ஜனப்கெமால் பாட்சா உள்பட அரசாங்க உத்தியோகஸ்தர்கள் அனைவரும் இவ்வகுப்புகளில் பாடஞ்சொல்லிக் கொடுப்பார்களாம். சமீபத்தில் தக்க உபாத்தியாயர்கள் இல்லாத இடங்களுக்கு ஆகாய விமானங்களில் தினந்தோறும் உபாத்தியாயர்கள் போந்து வகுப்பு நடத்தி விட்டுப் போவார்கள். அடுத்த ஆண்டு முடிவதற்குள் துருக்கியில் எழுதப்படிக்கத் தெரியாதவர்களே இல்லாமற் போய்விடலாம் என்று சொல்லப்படுகிறது. நாட்டின் நலத்தில் உண்மையில் கவலையுள்ள அரசாங்கத்தார் கல்வி பரப்பும் முறை இதுவாகும். இந்தியாவிலோ "பணமில்லை" என்ற அழுகுரலையே நாம் எப்போதும் கேட்கிறோம். ஒரு சர்வகலா சாலைக்குச் செலவாகும் பணத்தைக் கொண்டு ஒரு ஜில்லாவை, ஒரே வருஷத்தில், படிக்கத் தெரியாதவர்கள் இல்லாத ஜில்லாவாக ஆக்கிவிடலாம். சர்வகலாசாலையில் படித்துத் தேறும் மாணுக்கர் ஒவ்வொருவரும் ஆறு மாதம் ஒரு கிராமத்தில் தங்கி நூறு பேருக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்தபின்னரே அவருக்குப் பட்டம் வழங்கப்படுமென்று விதி செய்தால் ஒரு சில ஆண்டுகளில் குறைந்த பணச் செலவில் இந்தியாவைக் கல்வியில் தலை சிறந்த நாடாக ஆக்கிவிடலாம். ...ஆனால் இந்த ஆகாயக் கோட்டைகளை யெல்லாம் இப்போது கட்டுவதில் என்ன பயன்?

### அவமதிப்பு

ஐக்ய மாகாணக் கவர்னர் ஸர் மால்காம் ஹெயிலி நான்கு மாத விடுமுறை பெற்றுக் கொண்டார். அவர் இப்பதவிக்கு வந்து சில மாதங்கள்கூட ஆகவில்லை. பாவம்! இதற்குள்ளாக அவர் உழைத்தஉழைப்பினால் களைப்புற்றார் போலும். எனவே, அவர் ஓய்வு எடுத்துக் கொள்வதில் நமக்கு ஆட்சேபம் எதுவும் இல்லை. விடுமுறை காலத்தில் நியாயமாக அப்பதவி வகிக்க வேண்டியவர் யார் என்பதே நாம் கவனிக்க வேண்டிய விஷயமாகும். நிர்வாக சபையின் பிரதம அங்கத்தினரும், உப அக்கிராசனருமான சத்தாரி நவாப் அப்பதவிக்கு வரவேண்டியவர் என எவரும் சொல்வர். ஆனால் நடந்திருப்ப தென்ன? நவாப் புறக்கணிக்கப்பட்டு அவருக்குக் கீழிருந்த மிஸ்டர் லாம்பர்ட் ஆக்டிங் கவர்னராக நியமிக்கப்பட்டுள்ளார். ஐரோப்பியருக்குப் பதிலாக ஓர் இந்தியர் அதிகாரம் வகித்தால் புரட்டிவிடுவோர் என்று நாம் நம்பவில்லை. ஏற்கனவே, நான்கு மாதம் கவர்னர் பீடத்திலிருந்த சத்தாரி நவாப் அப்போது எதையும் புரட்டிவிடவும் இல்லை. ஆனால் இந்நிகழ்ச்சி அதிகார வர்க்கத்தின் மனோபாவத்தை நன்கு விளக்குவதா யிருப்பதால், ஈங்கெடுத்துக் காட்டினோம்.

## காந்தியடிகள்

### உண்மையோடியைந்தவாழ்வு

பாகம். 5 அத்தியாயம் 33

"இமாலயத் தவறு"

ஆமதாபாத் கூட்டம் முடிந்த உடனே நதியாத்துக்குச் சென்றேன். இங்கே தான் முதன் முதலில் 'இமாலயத் தவறு' என்னும் சொற்றொடரை உபயோகித்தேன். பின்னால் இச்சொற்றொடரைப் பலர் பல முறைகளில் கையாண்டார்கள். ஆமதாபாத்தி லிருந்த போதே என் தவறினை ஒருவாறு உணரத் தொடங்கி யிருந்தேன். ஆனால் நதியாத்துக்குச் சென்று அங்குள்ள நிலையை நேரில்பார்த்ததுடன் கேதா ஜில்லாவில் ஏராளமான ஜனங்கள் கைது செய்யப்பட்டிருப்பதாகவும் கேள்விப்பட்ட போது நான் செய்த பெருந் தவறு எனக்குச் சட்டென்று உதயமாயிற்று. கேதா ஜில்லாவிலும் மற்ற விடங்களிலுமுள்ள ஜனங்களை உரியகாலத்துக்கு முன்பே சட்ட மறுப்பு இயக்கத்தை மேற் கொள்ளும்படி சொல்லி விட்டதாய் இப்போது அறியலானேன். அங்கு நடந்த பொதுக் கூட்டத்தில் என் கருத்தை வெளியிட்டேன். இவ்வாறு என் தவறை ஒப்புக் கொண்டதால் பலராலும் எள்ளி நகையாடப்பட்டேன். எனினும் அவ்வாறு என் தவறை ஒப்புக் கொண்டதற்காக, நான் எப்போதும் வருந்தியது கிடையாது. ஒருவன் தன்னுடைய தவறுகளை மிகைப் படுத்தியும் பிறருடைய தவறுகளைச் சிறிதாக்கியும் பார்க்கப் பயின்றால் மட்டுமே இரண்டையும் நியாயமாக மதிப்பிடக் கூடுமென்பது என் கொள்கையாகும். சத்தியாக்கிரகியாக விரும்பும் ஒருவன் இவ்விதியை மனப் பூர்வமாகவும் சிறிதும் பிறழாமலும் அநுசரித்து வருதல் அவசியமென்று நான் கருதுகிறேன்.

அந்த இமாலயத்தவறு யாதென்று இப்போது பார்ப்போம். ஒருவன் சாத்வீகச் சட்ட மறுப்புக்குத் தகுதி பெறுவதற்கு முன்னால், இராஜாங்க சட்டங்களுக்கு விருப்பத்துடனும், மரியாதையுடனும் பணிந்து நடந்திருக்க வேண்டும். பெரும்பாலும் நாம் தண்டனை பயத்தை முன்னிட்டே சட்டங்களுக்குப் பணிந்து நடக்கிறோம். அதிலும் ஒழுக்கநெறியின் பாற்பட்டன வல்லாத சட்டங்களின் விஷயத்தில் இது பெரிதும் உண்மையாகும். உதாரணமாக, கண்ணியமும் மரியாதையுமுள்ள ஒரு மனிதன் திருடுதல் கூடாது என்னும் சட்டமில்லாமற் போயினும் உடனே திருட்டுத் தொழிலை மேற் கொள்ள மாட்டான். ஆனால் இவனே இருட்டிய பின்னர் வண்டிகளில் விளக்குப் போடவேண்டு மென்னும் விதியைப் புறக்கணிப்பதில் சிறிதும் தயங்குவதில்லை. இவ் விஷயத்தில் இனிமேல் ஜாக்கிரதையா யிருக்கும்படி புத்தி மதி சொன்னால் அது குறித்துக் கோபங் கொள்ளாமல் இருப்பானென்பதே சந்தேகத்துக்கிடம். ஆனால் இந்த விதி கட்டாயமாகச் செய்யப்பட்டால் அதை மீறுவதால் விளையக் கூடிய அசௌகரியங்களை முன்னிட்டேனும் அதற்குப் பணிந்து நடப்பான். இதை மனப் பூர்வமான கீழ்ப்படிதல் என்று சொல்லமுடியாது. சத்தியாக்கிரகியோவெனில், இவ்வாறின்றிச் சட்டங்களுக்கு மனப் பூர்வமாகக் கீழ்ப்படிதல் வேண்டும். கட்டாயத்திற்காக வன்றித் தன்னுடைய சொந்த மனோ விருப்பத்தினால் தன்னுடைய பரிசுத்தமான கடமையென்று கருதி அவன் சமூகத்தின் சட்டங்களுக்குக் கீழ்ப்படிகிறான்.

இவ்வாறு ஒருவன் சமூகச் சட்டங்களுக்குச் சிறிதும் பிறழாமல் பணிந்து நடக்கப் பயின்ற பின்னரே, எந்தச் சட்டங்கள் நல்லவை, நியாயமானவை, எவை அதர்மமான அநியாயச் சட்டங்கள் என்பதை நிர்ணயிக்கத் தகுதி பெறுகிறான். அப்போது தான் சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சிற்சில சட்டங்களை மறுக்கவும் அவனுக்கு உரிமை ஏற்படுகிறது. இந்த இன்றியமையாத நிபந்தனையைக் கவனியாது விட்டது தான் என்னுடைய தவறாகும். ஜனங்கள் இம்முறையில் தங்களைத் தகுதி செய்து கொள்வதற்கு முன்னால் அவர்களைச் சட்டமறுப்புத் தொடங்கும்படி நான் கேட்டுக்கொண்டு விட்டேன். என்னுடைய இத்தவறு இமயமலை போல் பெரியதாய் எனக்குக் காணப்பட்டது. நான் கேதா ஜில்லாவில் பிரவேசித்த உடன் கேதா சத்தியாக்கிரகப் போராட்டத்தின் பழைய ஞாபகங்களெல்லாம் திரும்பி வரவே, இவ்வளவு தெளிவான விஷயத்தை நான் உணராமல் போனது எங்ஙனமென்று வியப்புற்றேன். ஜனங்கள் சாத்வீகச் சட்ட மறுப்புச் செய்யத் தகுதி பெறுவதற்கு முன்னால் அதன் ஆழ்ந்த உட்பொருள்களைப் பூரணமாய் உணர்ந்து கொள்ள வேண்டிய தவசியமென இப்போது நன்கறிந்தேன்.

ஆனால் ஒரு கேள்வி நியாயமாகக் கேட்கலாம். அடிக்கடி சட்டங்களை மீறி நடப்பதையே வழக்கமாகக் கொண்ட ஜனங்கள் சட்டமறுப்பின் தத்துவம் முழுவதையும் திடீரென்று அறிந்து கொள்வதோ, அதன் எல்லைக்குள் கண்டிப்பாக நிற்பதோ எப்படிச் சாத்தியமாகும்? என்று வினவலாம். ஆயிரக் கணக்கான, லட்சக்கணக்கான ஜனங்கள் மேற் கூறிய நிபந்தனைகளெல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளுதல் அருமைதான். ஆதலின் ஜனத்திரள் சட்டமறுப்பை மீண்டும் தொடங்குவதற்குமுன்னால் நன்கு பயிற்சி பெற்றவர்களும் தூய இதயமுள்ளவர்களும் சத்தியாக்கிரக நிபந்தனைகளைப் பூரணமாயறிந்தவர்களுமான தொண்டர் கூட்டமொன்றை அமைத்தல் அவசியமாகும். அவர்கள் ஜனங்களுக்கு இந்நிபந்தனைகளை விளக்கிக் கூறி இடைவிடாத எச்சரிக்கையுடனிருந்து அவர்களை நேர் வழியில் நடத்தக் கூடும்.

இத்தகைய எண்ணங்கள் நிரம்பிய உள்ளத்துடன் நான் பம்பாய் சேர்ந்தேன். அங்கேயிருந்த சத்தியாக்கிரக சபையின் மூலமாய் சத்தியாக்கிரகத் தொண்டர் படை ஒன்றை அமைத்தேன். அவர்களுடைய உதவி கொண்டு ஜனங்களுக்குச் சத்தியாக்கிரகத்தின் உட்பொருளை உணர்த்தும் வேலை தொடங்கினேன். இவ்விஷயமாகத் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுவதன் மூலமாகவே, இவ்வேலை பெரிதும் நடந்து வந்தது. ஒரு புறத்தில் இம்முயற்சி நடந்து கொண்டிருக்கையில், ஜனங்களுக்குச் சத்தியாக் கிரகத்தின் சமாதான அம்சத்தில் சிரத்தை யுண்டாக்குவது கஷ்டமென்பதை நான் தெளிவாக அறியக் கூடியதாயிருந்தது. தொண்டர்கள் பெருந் தொகையாகப் பதிவு செய்து கொள்ள முன் வரவில்லை. பதிவு செய்து கொண்டவர்களிலும் எல்லாரும் ஒழுங்காகப் பயிற்சி பெறுவதற்கு வரவில்லை. நாளாக ஆக, புதிய தொண்டர்கள் அதிகமாய் வருவதற்குப் பதிலாக உள்ளவர்களும் கலைந்துபோகத்தொடங்கினர். சாத்வீக சட்ட மறுப்புப் பயிற்சி நான் முதலிலெதிர்பார்த்ததுபோல அவ்வளவு விரைவாக அபிவிருத்தி யடையாதென்பதை நன்கறிந்தேன்.

### லாலாஜியும் கதரும்

பர்தோலிப் போராட்டம் முடிந்தபின்னர் ஸ்ரீவல்லபாய் படேல் ஓய்வு பெறுவதற்காகச் சிம்லாவுக்குத் தமது சகோதரரின் விருந்தினராகச் சென்றிருந்தாராம். அப்போது அவர் ஒரு நாள் இந்திய சட்டசபைக்குச் சென்றபோது லாலாலஜபதிராய் சட்டசபையில் தமது இருக்கையில் இருந்த வண்ணம் உரத்தகுரலில் ஸ்ரீ வல்லபாய் படேலுக்கு வாழ்த்துக் கூறினாராம். பின்னர் அவர் படேலின் அருகில் வந்து அவரை ஆலிங்கனம் செய்து கொண்டு "காந்திஜிக்கு எப்போது விருப்பமோ அப்போது எனக்கு என்ன கட்டளை வேண்டுமானாலும் இடலாம் என்று சொல்லுங்கள். நான் கதர் இயக்கம் சம்பந்தமாகப் பூரண மாறுதல் அடைந்து விட்டேன் என்றும் சொல்லுங்கள். இப்போது நான் நூல் நூற்கக் கற்றுக் கொண்டிருக்கிறேன். அதில் தேர்ச்சியடைந்ததும் காந்திஜிக்குக் கடிதமெழுத உத்தேசித்திருக்கிறேன்." என்று கூறினாராம்.

## லஜபதியின் மரணம்

### பஞ்சாப் சட்டசபையில் விவாதம்

#### டாக்டர் ஆலம் அவர்களின் எச்சரிக்கை

சென்ற 30-ந் தேதி பஞ்சாப் சட்ட சபையில் டாக்டர் முகமது ஆலம் பின்வரும் தீர்மானத்தைப் பிரரேபித்தார்:—

"லாகூரில் அக்டோபர் மாதம் 30-ந் தேதியன்று பொது ஜனத்தலைவர்களைத் தாக்கியடித்த போலீஸ் சூப்பரின்டெண்ட் மிஸ்டர் ஸ்காட் உள்ளிட்ட போலீஸ் உத்தியோகஸ்தர்களின் நடத்தையைப் பற்றி விசாரிக்க இச்சபையின் உத்தியோகஸ்தரல்லாத அங்கத்தினரடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட வேண்டுமென்று இச்சபை சிபார்சு செய்கிறது."

தீர்மானத்தின் மீது டாக்டர் ஆலம் பேசியதாவது:— "இத்தீர்மானத்தைக் கொண்டு வருவதில் எனது நோக்கங்கள் இரண்டாகும். பொது ஜனங்களுக்கு நான் செலுத்த வேண்டிய கடமை ஒன்று; மற்றொன்று அரசாங்கத்தின் மீது சுமத்தப்பட்டிருக்கும் பெருங் குற்றத்திற்குத் தான் பொறுப்பாளியல்லவென்று நிரூபிக்க அதற்கொரு சந்தர்ப்பம் கொடுக்கவேண்டு மென்பது. இந்தியாவில் பிரிட்டிஷார் வந்ததிலிருந்து இவ்வளவு பெரிய குற்றம் அரசாங்கத்தின் மீது சுமத்தப்பட்டதில்லை. இவ்வங்கிய அதிகாரவர்க்க அரசாங்கத்தின் ஆரம்ப சரித்திரத்தில் நிகழ்ந்த 'இருட்டறை' விபத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் அக்டோபர் மாதம் 30-ந் தேதி யன்று அரசாங்க உத்தியோகஸ்தர்கள் செய்த காரியத்திற்குப் பரிகாரம் கிடைத்தாலன்றி இவ்வாட்சிமுறையின் சரித்திரத்தில் இதுவே மிகப் பாதகச் செயலாய் விளங்கும்.

"இச்சபையில் நம்முடைய காரியங்[illegible] பற்றித் தீர்ப்பளிக்க வெளியில் க[illegible] இருக்கிறார்களென் பொது ஜன[illegible]வோமாக. ஜனங்[illegible]பதை நினைவு கூ[illegible] மடைக்கள் இவ்விஷயமாகக் கலக்[illegible]மடைந்திருக்கிறார்களென்பதில் இரகசிய[illegible]மில்லை. அரசாங்க அங்கத்தினர்கள் இத்தீர்மானத்தை எதிர்ப்பார்களென்று நான் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில்அவர்கள்குற்றமற்ற நெஞ்சுள்ளவர்களா யிருப்பின், விசாரணையைக் குறித்துஅவர்கள் பயப்பட ஏதுவில்லை. உண்மையில் பொதுஜன அபிப்பிராயம் என்னும் நீதிமன்றத்தின் முன்னால், நாம் இப்போது விசாரிக்கப்பட்டு வருகிறோம் என்று சொல்லலாம்."

பின்னர் டாக்டர் ஆலம், முன் கம்பிவேலியில் இடைவெளியிருந்ததைப்பற்றிக் குறிப்பிட்டு, "ஜனங்களை அதற்குள் புகும்படி செய்து அவர்கள் மீது பலாத்காரக் குற்றம் சுமத்த வேண்டுமென்றே அவ்விடைவெளி விடப்பட்டிருந்தது. ஓர் ஐரோப்பிய உத்தியோகஸ்தர் லாலாஜியின் சட்டையைப் பிடித்துக் கொண்டு தன் கையிலிருந்த தடியினால் அவர் மார்பிலடித்ததை நான் பார்த்தேன்" என்று கூறினார்.

பின்னர் லாலாஜியின் வாக்கு மூலத்தையும், அவருடைய வைத்தியர்களின் அறிக்கையையும், திவான் சமன்லால் பேச்சையும் டாக்டர் ஆலம் விவரித்துவிட்டு, இச்சம்பவம் குற்றச்சட்டம் 304-வது பிரிவின்கீழ் வாராதா என்று கேட்டார். "இந்த நிலைமையில் லாலா லஜபதிராயின் மரணத்துக்கு அரசாங்கத்தாரே பொறுப்பாளிகளென்று நான் குற்றஞ் சாட்டுகிறேன். உத்தியோகப் பற்றற்ற விசாரணையின் மூலம் தங்கள் நடத்தை குற்றமற்றதென்று நிரூபித்தல் அரசாங்கத்தாரின் கடமை யாகும். அரசாங்க உத்தியோகஸ்தர்கள் இவ்வாறே நடந்து வருவார்களாயின், விரைவிலோ, நாள் கழித்தோ பலாத்காரம் வந்தே தீரும்" என்று டாக்டர் ஆலம் அறைந்தார். ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் தமது சட்டைப்பையிலிருந்து மரப் பாதக்குறடு ஒன்றை எடுத்துக் கீழே வைத்ததைத் தாம் பார்த்ததாகவும் கூறினார்.

பஞ்சாப் அரசாங்கத்தின் தலைமைக் காரியதரிசி மிஸ்டர் பீஸ்லி தீர்மானத்தை எதிர்த்தார். மிஸ்டர் பாயிட் இதுகுறித்து விசாரணை நடத்திப் போலீஸார்மீது தவறில்லை என்று தீர்ப்புக் கூறிவிட்டதாகவும், அத்தீர்ப்பை அரசாங்கத்தார் ஒப்புக்கொண்டு விட்டதாகவும், இனி விசாரணை நடத்தல் அவசியமில்லையென்றும் அவர் கூறினார்.

இன்னும் பலர் ஆதரித்தும் எதிர்த்தும் பேசிய பின்னர் 3வ கூட்டத்தில் வாக்கெடுத்தபோது, தீர்மானத்துக்குச் சாதகமாக 22 பேரும் பாதகமாக 51 பேரும் வாக்களித்தபடியால் தீர்மானம் தோல்வியுற்றது.

## ஸ்ரீ ஜகதீச சந்திரரின் ஆராய்ச்சி

### உலக அறிஞர்களின் வாழ்த்துரைகள்

#### பிறந்த தினக் கொண்டாட்டம்

நாளது டிசம்பர் மாதம் முதல் தேதியன்று ஸர் ஜகதீச சந்திரவஸுவின் 70-வது பிறந்த தினக் கொண்டாட்டம் மேற்படியாரின் விஞ்ஞான கலாசாலையில் அவருடைய மாணாக்கர்களாலும், அபிமானிகளாலும் கொண்டாடப் பெற்றது. அது காலை உலகத்தின் பற்பல பகுதிகளிலிருந்தும் மகா பண்டிதர்கள் பலர் ஸ்ரீ வஸுவுக்கு வாழ்த்துரைகள் அனுப்பியிருந்தார்கள். "நேசர்" பத்திராசிரியர் ஸர் ரிச்சர்ட் கிரீகரி ஏகாதிபத்திய விஞ்ஞான கலாசாலையைச் சேர்ந்த ஸர் ஜான் பிரேஸர், மூனிச் சர்வகலாசாலையைச் சேர்ந்த ஆசிரியர் கோபல், எகிப்திய அரசாங்கத்தின் விவசாய மந்திரி, சீன அரசாங்கத்தின் கல்வி மந்திரி, மிஸ்டர் பர்னார்ட் ஷா, ரொமேன் ரோலண்டு முதலியோர் வாழ்த்துரை அனுப்பியிருந்தவர்களில் முக்கியமானவர்களாவர்.

#### "மகா ஞானி"

பிரஞ்சு நாட்டு மேதாவியான ரொமேன் ரோலண்டு அனுப்பிய செய்தியில் கூறியிருந்ததாவது:— "மற்றவர்கள் உங்களை விஞ்ஞானத்துறையில் மேதாவியென்று புகழலாம். நானோ உங்களை மகாஞானி என்றே போற்றுகின்றேன். மௌனம் பூண்ட தாவரங்களின் இரகசியங்களை நீங்கள் அறிந்து எங்களுக்குத் தெரிவித்திருக்கிறீர்கள். உண்மையான க்ஷத்திரியராகிய நீங்கள் மனிதனறிவுக்கப்பாற்பட்ட பிரதேசங்களை வெற்றி கொண்டு விட்டீர்கள். கருணையுள்ளத்துடன் கூடிய மகா மந்திர வாதியான உங்களுக்கு வணக்கம் செலுத்துகிறேன். கீழ் நாட்டின் ஆத்மவித்தையையும் மேனாட்டுப் புற உலக ஆராய்ச்சி முறையையும் நீங்கள் ஒன்று படுத்தி யுள்ளீர்கள். மௌன விரதம் பூண்ட ஜீவராசிகள் வாழும் இராஜ்யத்தில் நாங்கள் பிரவேசிக்குமாறு செய்திருக்கிறீர்கள். நேற்றுவரை அந்த இராஜ்யம் எங்களுக்கு இருள் சூழ்ந்து மரணம் குடி கொண்ட பிரதேசமாகவே தோன்றி வந்தது. இந்த நூற்றாண்டில் மன் ஆத்ம சம்பத்தைச் சிறிதளவும் கைவிடாமலே, பிரகிருதியின் அற்புத இரகசியங்களை அறிவதற்கு ஐரோப்பா நடத்திவரும் பெருமுயற்சியில் ஒத்துழைக்கும் என்பது வெளியாகிவிட்டது. அத்தகை அறிவு புவனமெல்லாம் பரவி நிற்கும் பரமாத்மாவின் மகிமையையே வளர்ப்பதாகுமன்றோ?"

#### "ஆசியாவுக்கே மகிமை"

நான்கிங்கைத் தலை நகராகக் கொண்ட புதிய சீனதேசிய அரசாங்கத்தின் கல்வி மந்திரி அனுப்பிய செய்தியில் குறிப்பிட்டிருந்ததாவது:— "விஞ்ஞான ஆராய்ச்சியைத் தாங்கள் பாரமார்த்திக நிலைக்கு உயர்த்தி விடுவீர்களென்று உலகம் எதிர்பார்க்கிறது. உங்களுக்கு ஏற்படும் மகிமை ஆசியா முழுவதிற்கும் ஏற்பட்ட மகிமையாகும்."

இந்த வைபவத்திற்கென்று கவி ரவீந்திரநாத தாகூரினால் புனையப்பட்ட ஒரு கவிதை படிக்கப்பட்டது. பின்னர், ஸ்ரீ வஸுவின் பழைய, தற்போதைய மாணாக்கர்களாலும், கல்கத்தாவிலுள்ள பற்பல கல்வி நிலையங்கள், பிற ஸ்தாபனங்களின் சார்பாகவும் உபசார பத்திரங்கள் படிக்கப்பட்டன. ஸ்ரீ ஜகதீச சந்திரவஸு இவற்றிற்கு விடையிறுக்கையில் கூறியதாவது:—

"என்னுடைய விஞ்ஞான ஆராய்ச்சி சாலையில் நான் ஒரு தபசியைப்போல் காலங்கழித்து வந்தேன். அப்போது எனக்கு வெளியான புதுமைகளின் உண்மை எனது இந்த வாணாளில் மெய்ப்பிக்கப்படாமலே போகலாமென்று அஞ்சியதுண்டு. ஆனால் இறைவன் உள்ளம் வேறு விதமாயிருந்தது. இந்திய மகா சமூகத்தின் தலைவிதியை நிர்மாணித்து வரும் தேவனுக்கு வணக்கம் செலுத்துகிறேன். மனிதனுடைய அறிவின் எல்லையை விசாலப்படுத்தத் துணை செய்வதின் மூலமாய், உலகிலுள்ள நாகரிக தேசங்களுக்குமத்தியில் இந்தியாவுக்கும் ஒரு பிரதான ஸ்தானம் பெறுவதற்குச் சென்ற 40 ஆண்டு காலமாய் நான் போராடி வருகிறேன். உலகம் இன்று பிரிவுபட்டுக் கிடக்கிறது. தேசங்கள் சண்டைக்கு ஆயத்தம் செய்து வருகின்றன. நாகரிகத்துக்கே அழிவு நேரிடலாமென்ற பயம் ஏற்பட்டிருக்கிறது. உலகம் சர்வநாசம் அடையாமல் காப்பாற்றப்பட ஒரே ஒரு வழிதான் உண்டு. அது மக்கட்குலத்தின் பொது நன்மைக்காக அறிவுத்துறையில் ஒத்துழைப்பதே யாகும். கீழ்நாடு உலகிற் களிக்கும் நற்செய்தி இதுதான். சீனத்திலிருந்து கடைசியாக வந்த செய்தி கூறுவதே போன்று விஞ்ஞான ஆராய்ச்சியைப் பாரமார்த்திக அநுபவ நிலைக்கு உயர்த்திவிட வேண்டும். உயிர்களெல்லாம் ஒரே தரமாயிருப்பதைப் பார்த்து, மனிதர்கள் தங்கள் நோக்கங்களில் ஒற்றுமைப்பட வேண்டும். மக்கட்குல நாகரிக ஒருமைப்பாடு அப்போது தான் சாத்தியமாகும்."

சென்ற மாதம் 29உ ஸ்ரீ வஸுவின் விஞ்ஞான கலாசாலை ஆண்டுவிழாக் கொண்டாடப் பெற்றது. அப்போது வியன்னா சர்வகலாசாலையிலிருந்து வந்திருக்கும் ஆசிரியர் மோலிஷ் கூறியதாவது:—"நான் இங்கே வரும்போது மிக அதிகமாகவே எதிர்பார்த்தேன். ஆனால் நான் எதிர்பார்த்ததையும் விட அதிக உண்மைகளை இங்கே கண்டேன். ஸ்ரீ வஸு ஊமை உலகைப் பேசும்படி செய்திருக்கிறார். மௌனம்பூண்ட தாவரங்களைத் தங்கள் வாழ்க்கை மர்மங்களையெல்லாம் எழுதும்படி செய்திருக்கிறார். இந்த மகானுடன் பழக்கம்பெற்றதை நான் ஒரு பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்."

## உடல் நலம்

### மெலிந்த தேகம்

மெலிந்த தேகமுடையவர்கள் சிலர் தங்கள் உடலைப் பருக்கச் செய்வதற்காக வயிறு கொள்ளும் வரையில் உணவைத் திணிக்கிறார்கள். நிரம்பச் சாப்பிட்டால் உடம்பு வலிவு பெற்றுவிடும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். இதைப்போல் தவறான எண்ணம் வேறு கிடையாதென்று டாக்டர் பிராங் மக்காய் என்பார் சொல்கிறார். சாதாரணமாக, உடல் மெலிந்தவர்களுக்கு ஜீரண சக்தி மிகவும் குறைவா யிருத்தல் வழக்கம். எனவே, சொற்ப உணவையும் அவர்களால் எளிதில் ஜீரணித்துக்கொள்ள முடியாது. இந்நிலையில் அளவுக்குமீறி உணவைத் திணிப்பதால் எத்தகைய கேடுவிளையுமென்று கூற வேண்டுவதில்லை யன்றோ?

* * *

### இயற்கை மெலிவு

சிலர் இயற்கை யாகவே மெலிந்த தேகமுடையவர்களா யிருக்கிறார்கள். சிலருடைய உடல் நோயினால் மெலிகிறது. குதிரைகளில் பந்தயக் குதிரைக்கும், சாதாரண குதிரைக்கும் உடல் அமைப்பில் இயற்கையான வேற்றுமை உண்டல்லவா? இயற்கையாக மெலிந்த தேகமுடையவர்கள் தங்கள் தேகத்தைப் பருக்கச் செய்ய முயல்வது அறிவீனமாகும். அவர்கள் நல்ல தேகப் பயிற்சியினாலும், சுகாதார முறைகளை அனுசரிப்பதனாலும் எவ்வித நோய் நொடியுமின்றி வாழக்கூடும். உடம்பு பருக்க வேண்டுமென்றாவது, உடம்பில் சதை போட வேண்டுமென்றாவது ஒருவன் விருப்பங் கொள்ளலாகாது. உடம்பு பூரண சுகத்துடன் இருக்க வேண்டுமென்பதே அறிவுள்ளவனின் இலட்சியமாயிருக்க வேண்டும்.

* * *

### உடல் வலிமைக்கு வழி

தன் தேகம் இயற்கையாகவே மெலிந்ததா, நோயினால் மெலிந்ததா என்பதை எவனும் சிறிது அறிவுகொண்டு யோசித்தால் எளிதில் உணரலாம். இல்லாவிடினும் வைத்தியர்கள் நிச்சயமாய்ச் சொல்லி விடுவார்கள். இயற்கையான மெலிவன்று எனத் தெரியவந்தால் அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். எந்த நிலைமையிலும், வயிறு நிறையச் சோறு திணிக்கும் முறையைக் கையாளலாகாது. அப்படிச் செய்தால், உடல் வலிமை பெறுவதற்குப் பதிலாகப் பித்தம் மேலிடல், நாவில் அழுக்குப்படிதல், கல்லீரல் நோய், மற்றும் ஜீரணக் கருவி சம்பந்தமான பல வியாதிகள் ஏற்படக்கூடும். பெரும்பாலானவர்கள் விஷயத்தில், ஜீரணக் கருவிகள் கெட்டிருப்பதால் தின்ற உணவு செரியாமல் கழிந்துவிடுவதும், சத்தில்லாத உணவு அருந்துவதும் உடல் மெலிவுக்குக் காரணமாயிருக்கலாம். இக்காரணங்களை அறிந்து முறையான உபவாசத்தினால் ஜீரணக் கருவிகளைச் செப்பனிட்டுக் கொள்ளுவதும், சத்துள்ள உணவு மிதமாக அருந்துவதும், தேகாப்பியாசம் செய்வதுமே உடல் வலிமை பெறுதற்குத் தக்க வழிகளாகும்.

* * *

### உடல் நலமும் செட்டும்

உடல் நலத்தையும் பாது காத்துக் கொண்டு பணத்தையும் மீதமாக்கும் வழிகள் சிலவற்றை ஒரு பிரபல வைத்தியர் கூறுகிறார். பளபள வென்று மின்னும் பார்வைக் கழகான வெள்ளைச் சர்க்கரை உடலுக்கு மிகவும் தீமைபயப்பது. இதைவிட வெல்லமும், நாட்டுச் சர்க்கரையும் எவ்வளவோ மடங்கு நல்லவையாகும். ஆதலின் வெள்ளைச் சர்க்கரையைப் பகிஷ்கரித்து வெல்லம் அல்லது நாட்டுச் சர்க்கரையை உபயோகப் படுத்துவதால் உடம்புக்கும் நலம்; பணமும் மிச்சம். தற்போது வருஷந்தோறும் 15 கோடி ரூபா பெறுமான வெள்ளைச் சர்க்கரை வெளி நாடுகளிலிருந்து இந்தியாவுக்கு வருகிறது. ஆதலின் மேற்படி யோசனையைக் கடைப்பிடிப்பதால் தனி மனிதர்களுக்கு மட்டு மன்றி நாட்டுக்கும் லாபம் உண்டு. கறிகாய்களைத் தோலுடன் சமைப்பதும், அவற்றின் தண்ணீரை வடித்து விடாமல் பாகம் செய்வதும் உடல் நலத்துக்கேற்ற மற்றொரு செட்டு முறையாகும். இம்மாதிரி சமைப்பதற்கு உப்பு குறைவாகப் போட்டால் போதும். மிளகாயும், புளியும் முற்றும் அநாவசியம். மூன்று வேளையும் சமைத்த உணவு உட்கொள்வதற்குப் பதிலாக ஒரு வேளையேனும் பழம், கொட்டை அல்லது பச்சைக் கறி காய்கள் அருந்தினால் அடுப்புக் கரி, அல்லது விறகு மீதமாகும். எல்லாரும் ஆரஞ்சுப் பழமும் திராட்சைப் பழமும் பாதம் பருப்பும் சாப்பிட முடியாது. ஆனால் வாழைப் பழமும், கடலைக் கொட்டையும், தேங்காயும் பலருக்கு எளிதில் கிடைக்கும். சிலர் பச்சையாய்ச் சாப்பிடக்கூடிய வெள்ளரிக்காய் முதலியவைகளையும் சமைக்கிறார்கள். இதைவிட அறியாமை வேறு கிடையாது. உடல் நலத்துக்குரிய செட்டு முறைகளில் தலை சிறந்தது காப்பி, தேயிலைப் பானங்களை ஒழித்தலாகும். இவற்றில் கலக்கப்படும் பாலை மோராக்கி அருந்துதல் உடலுக்கு மிக்க நன்மை தரத்தக்கது.

* * *

### மனிதனின் ஆயுள்

குதிரை பிறந்து ஐந்து ஆண்டு வரையில் தான் வளருகிறது. நாய் $2\frac{1}{2}$ வயதுவரைக்கும், ஒட்டகை எட்டு வயதுவரைக்கும், பூனை $1\frac{1}{2}$ வயது வரைக்கும் வளருகின்றன. மனிதன் 25 வயது வரையில் வளர்ச்சி யுறுகிறான். இந்த விகிதப்படி பூரண ஆயுள் பின்வருமாறு ஏற்படுகிறது. குதிரை 25, நாய் 12, ஒட்டகை 40, பூனை 8, மனிதன் 125. மேற்படி மிருகங்களின் சராசரி ஆயுளைக் கணக் கெடுத்துப் பார்த்தால் ஏறக் குறைய பூரண ஆயுட் காலமும் ஜீவிக்கின்றன வென்று தெரியவருகிறது. ஆனால் மனிதனுடைய சராசரி ஆயுளோ அவன் பூரண ஆயுட் காலத்தில் பாதிக்குக்கூட வருவதில்லை. இந்த வேற்றுமைக்குக் காரணம் மிருகங்கள் பெரும்பாலும் இயற்கையோடியைந்தவாழ்வு நடத்துவதும் மனிதர்கள் செயற்கைச் சேற்றில் வீழ்ந்திருப்பதுமேயாகுமென்று ஓர் ஆராய்ச்சிக் காரர் நவில்கிறார்.

* * *

### குழந்தைகளுக்குச் சிறந்த உணவு

பச்சைக் குழந்தைகள் கத்தும் போதெல்லாம் சில அறியாத தாய்மார்கள் பால் புகட்டுகிறார்கள். இது முற்றும் தவறாகும். சில சமயம் குழந்தைகள் வயிற்று நோவினால் அழுவதுண்டு. எனவே, திட்டமாகக் குறிப்பிட்ட வேளைகளிலேயே பால் புகட்டவேண்டும். இடை வேளைகளில் தண்ணீர் கொடுக்கலாம். பச்சைக் குழந்தைகளுக்குத் தாயின் பாலே சிறந்த உணவாகும். ஆனால் ஒரு வயதுக்குப் பிறகு தாய்ப்பால் உதவாது. தாய் கருத்தரித்த பின்னர் நிச்சயமாகக் கூடாது. சோதனை நடத்திப் பார்த்ததில், தாய்ப்பாலே அருந்தாத குழந்தைகளுக்கும், பத்து மாதத்துக்குமேல் தாய்ப்பால் அருந்திய குழந்தைகளுக்கும் நோய் வருதல் அதிகமென்று தெரியவந்திருக்கிறது தாய்ப்பால் கிடைக்காவிட்டால், அடுத்தபடியாக ஆட்டுப்பாலும், புல் மேயும் பசுவின் பாலும் கொடுக்கலாம். கடைசி தரமாக கிளாக்ஸோ, லாக்டோஜன் என்னும் தூள் வடிவில் உள்ள பால் அளிக்கலாம். புட்டிப்பால் தான் எல்லாவற்றிலும் தீமை பயப்பது. புட்டிப்பால் அருந்தி வளரும் குழந்தைகளில் 100க்கு 72 குழந்தைகளுக்குப் பற்கள் கெட்டு விடுவதாகக் கணக்கிடப் பட்டிருக்கிறது.

* * *

### கோபத்தினல் உடல்நலங் கெடுதல் எப்படி?

மனிதனுக்குக் கோபம் வருங்காலத்தில் 'அட்ரினல் கிளாண்டு' என்னும் உறுப்புக்கள் அதிகமான ரசத்தை வெளிப்படுத்துகின்றன. 'அட்ரினலின்' என்னும் இந்த ரசம் உடம்பில் சர்க்கரை அதிகம் உண்டாக்குகிறது. உடம்பில் சர்க்கரைதான் ஊக்கமாக வேலை செய்யவும், ஓடவும், சண்டையிடவும் உபயோகமாகிறது. இந்த அதிகப்படி சர்க்கரைச் சத்தை உபயோகப்படுத்தாவிட்டால் அது சிறு நீர்வழியாக வெளிப்படத் தொடங்குகிறதாம். மக்களுக்கு நீர்ரோகம் வருவதற்கு இது ஒரு காரணமாகும். நாகரிகமற்ற ஜனங்களுக்குக் கோபம் வந்தால் அவர்கள் ஒருவரோடொருவர் சண்டை போட்டுக்கொள்கிறார்கள். அல்லது காலையும், கையையும், ஆட்டிக் கொண்டு ஒருவரை யொருவர் திட்டுகிறார்கள். அல்லது ஓடுகிறார்கள். இந்த வழிகளில் அதிகப் படி சர்க்கரை செல வழிந்து விடுகிறது. ஆனால் நாகரிக மடைந்த ஜனங்களோ கோபம் வந்தால் கைகலந்து சண்டை போடுவதில்லை. கோபத்துடனேயே படுக்கச் சென்று, கோர்ட்டுக்குப் போவதைப்பற்றி ஆலோசித்து ஆலோசித்து மூளை வறளும்படி செய்கிறார்கள். இதனால் அதிகப்படி சர்க்கரை உபயோகப்படுத்தப்படாமல் அவர்களுடைய சிறு நீரின் வழியே வெளியாகிறது. படியாத வகுப்பாரிடையே விடப் படித்த நாகரிக மக்களிடையே நீர் ரோகம் அதிகமாயிருப்பதற்கு இஃது ஒரு காரணமாகும் என்று ஒரு வைத்தியர் கூறுகிறார். ஆதலின் யாருக்காவது கோபம் வந்தால் அவர் உடனே வேகமாக நடந்தோ, ஓட்டம் பிடித்து ஓடியோ உடலில் உண்டாகும் அதிகப்படி சர்க்கரையை உபயோகப் படுத்தல்வேண்டும். கூடிய விரைவில் கோபத்தை மறந்து விடவும் முயலவேண்டும்.

## மக்களின் சூட்சும சக்திகள்

### கிரே சீமாட்டியின் அநுபவம்

#### ரயிலும் தந்தியும் அநாவசியம்

சென்ற மகாயுத்தத்தின் போது பிரிட்டிஷ் அன்னியநாட்டு மந்திரியா யிருந்த லார்டுகிரே தமது மனைவியாருடன் சமீபத்தில் இந்தியாவுக்குவர உத்தேசித்திருந்தார். ஆனால் துரதிர்ஷ்ட வசமாக, அவ்வம்மையார் சில நாட்களுக்கு முன் காலஞ்சென்று விட்டார். லேடிகிரே சீமாட்டியார் ஆவி உலக ஆராய்ச்சியில் பெரிதும் ஈடுபட்டவர்; மானத சக்தியில் அபார நம்பிக்கையுள்ளவர். அவர் காலமாவதற்கு முன்னால் எழுதிய ஒரு கட்டுரையில் கூறுவதாவது:—

"மனிதர்கள் தங்களுக்குள் மறைந்து கிடக்கும் சூட்சுமசக்திகளை வெளிக் கொணர்ந்து வளர்த்துக் கொள்வார்களாயின், கம்பியில்லாத் தந்தி, டெலிவிஷன் முதலியவற்றிற்குச் சிறிதும் அவசியமில்லாமற் போய்விடும். என் அநுபவத்திலிருந்து இதற்கு ஓர் உதாரணம் தருகிறேன். 1905-ம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலில் என் கணவர் ஸாலிஸ்பரி தொகுதிக்கு அபேட்சகராக நின்றார். நாங்கள் அங்கே தேர்தல்வேலைசெய்து கொண்டிருந்த போது எங்கள் குழந்தைகளைத் தங்கள் பாட்டனார் வீட்டில் விட்டிருந்தோம். அப்போது மோட்டார் வாகனம் இன்னும் உபயோகத்திற்கு வந்துவிடவில்லை யாதலின், சில சமயம் ஒரு வாரத்திற்குமேல் குழந்தைகளை விட்டுப் பிரிந்திருக்க நேர்ந்தது. ஒருமுறை எழு வயதுச் சிறுவனாயிருந்த எங்கள் புதல்வன் நோயினால் பீடிக்கப்பட்டான். ஒருநாள் காலையில் நான் எழுந்ததும் என் கணவரிடம் "இன்று எனக்குச் சந்தோஷமாயிருக்கிறது. குழந்தையின் சுரம் தணிந்துவிட்டதாகவும் அவன் அமைதியாகத் தூங்குவதாகவும் கனவு கண்டேன்" என்று சொன்னேன்.

அதே இரவில் குழந்தையைக் கவனித்து வந்த தாதி என்னைப் பார்த்ததாகப் பின்னால் தெரிய வந்தது. குழந்தை படுத்திருந்த அறையின் கதவு திறந்த சத்தம் கேட்டு அவள் கண் விழித்தாளாம். நான் உள்ளே வந்து குழந்தையின் படுக்கையருகில் சென்று குனிந்து பார்த்ததாக அவளுக்குப் புலப்பட்டதாம். பின்னர் வந்த வழியே நான் திரும்பிப் போய்விட்டேனாம். என் உருவம் மட்டும் பனியினால் மூடப்பட்டதுபோல் சிறிது மங்கலாகத் தெரிந்ததாம். நான் கனவுகண்ட இரவிலேயே இதுவும் நிகழ்ந்தது என்பதை ஐயமறத் தெரிந்து கொண்டேன்.

என் வாழ்க்கையில் இத்தகைய அநுபவங்கள் எவ்வளவோ நிகழ்ந்திருக்கின்றன. நமது சூட்சும சக்திகளின் பெருமையை நாம் இன்னும் நன்குணராமல் இருக்கிறோம்; அவை நீண்ட காலமாகப் பயன் படுத்தப் படாத காரணத்தினால் அமுங்கிச் செயலற்றுக் கிடக்கின்றன. எனவே, ரயில், டெலிபோன், கம்பியில்லாத் தந்தி முதலிய வெளி உலகச் சாதனங்கள் நமக்குத் தேவையாயிருக்கின்றன. சூட்சும சக்திகளை நன்கு வளர்த்து விட்டோமானால் இவற்றிற்கெல்லாம் அவசியமே இல்லாமற் போய்விடும்."



## கல்வி

ஜனாப் கா. நயினார் முகம்மது எழுதுவது:—

"அரிதரிது மானிடராதலரிது" என்ற ஔவையாரின் திவ்விய மொழியே போல், பெறற்கரிய மனிதயாக்கையைப் பெற்ற மக்கள், இவ்வுலகிற் பெறவேண்டிய உறுதிப்பொருள் நான்கையும் அடைய உறுகருவியா யுதவுந் தகைமையதாவும், முற்றுமுணர்ந்த முதல்வ னருளாற்றனது முழுக் கருணையோடு மக்களுக்கு அளிக்கப்பட்டதுமாகிய ஒரு பொருள், உலகில் தொன்று தொட்டே துலங்கிவருகிறது. அதையே, 'கல்வி' 'கல்வி' என்று நம்பண்டைப் புலவோர் பகர்ந்தனர்.

நம் நாட்டிற் பண்டை நாளிற் 'கல்வி' எனும் பொருள் எவ்வாறு நிலவியது? தற்போழ்து எத்தன்மைத்தாயிலங்குகிறது என்று ஆய்வதன்முன், 'கல்வி' எனும் பொருள், மக்களுக்கு மிகவும் இன்றியமையாத ஒன்றா? மக்களுக்கு அஃது அவசியம் அமையத்தான் வேண்டுமெனில், அக்கல்வி யாது பயனை அளிக்கவல்லது? அக்கல்விக்குற்ற அரும் பண்பு என்னை? என்னும் இன்னோரன்ன கடாக்களையெழுப்பி விடையிறுத்து மேற்சென்று ஆய்வோம்.

மக்கட்குஇயற்கையாகவேஇறைவனுலளிக்கப்பட்ட 'அறிவு' எனும் எழில் விளக்கொன்றமைந்துளது. சுடர் விளக்காயினுந் தூண்டுகோலொன்று வேண்டும் என்ற பெரியாரின் அரிய மொழியே போல் மக்கள் அவ்வறிவாகிய விளக்கைச் செம்மை நெறியிற் செலுத்திப்பயன்படுத்த 'கல்வி' எனுந் தூண்டுகோலொன்றுவேண்டற்பாலது. இத்தூண்டுகோலை மக்கள், உளத்தேதரித்து, தத்தம் கருமத்தை யாற்ற அவ்விளக்கைப் பிடித்துச்செல்வரேல், அது சீரிய நெறியிற் செலுத்துமென்பது திண்ணம்.

மக்கள், இவ்வியனுலகிற்பிறந்து இயற்றற்குரிய பொருள்கள் இரண்டு. அவை:—'இல்வாழ்வு' 'வீடு' என்பன. மற்ற அறங்களும் உளவேனும் இவ்விரண்டினும் அவையெல்லாம் அடங்கும் என்க. ஆகலான் மக்கள், இவ்வில்வாழ்வை இனிதியற்றக்'கல்வி' வேண்டற்பாலதா? என்று சிறிது நோக்குவோம்.

இல்லறமியற்ற இறங்கிய ஆடவரும் பெண்டிரும் நன்கு கற்றவர்களாயிருத்தல் வேண்டும். என்னை? இல்லறத்திற்குரிய இன்பத்தை யளிக்கவல்ல பொருட் செல்வத்தை ஆட்வர் சீரிய வழியிற்சேர்த்துச் சிக்கனமாய்ச் செலவு செய்து மனைவியுடன் வாழ்தல், தெய்வவழிபாடு, விருந்தெதிர் கோடல், தென் புலத்தார் கடன் ஆகியகருமங்களை ஆற்ற அன்னார் 'கல்வி' கற்றிருத்தல்வேண்டும். கல்வியின்றி ஒருவன் மேற்கூறிய கருமங்களை யாற்றப்புகின் அன்னான் செந்நெறிவிடுத்து வெந்நெறியில் வீழ்வனென விளம்புவது மிகையாகாது. இல்லறத்தை யினிது நடாத்த ஆடவர்களை விட, பெண்டிரே அதிகம் கற்றவராயிருத்தல் வேண்டும் என்பது எமது துணிபு. என்னை? ஆடவர்கள் பகலெலாம் பலப்பல தொழில்களியற்ற தமது யாக்கையை வருத்தி, தத்தம் குடும்பத்திற்கு வேண்டிய பொருள்கள் சிலஈட்டி மனைக்குவரின் பெண்டிர் தமக்கு இயற்கையாயமைந்தஇனியமொழியானும், தமதன்பினானும்அன்னார்களைப்பை யாற்றியும் அன்புடன் சமைத்த அறுசுவையுண்டி யூட்டியும் இன்புறச் செய்தல் வேண்டும். இவ்வுண்மையை வல்லூர் தேவராஜப் பிள்ளையவர்களும், தாமியற்றிய குசேலோபாக்யானத்தில்,

"கண்டன் வேறொரு கரும நெஞ்சகங்
கொண்டு மற்றைய குறைத் திருப்பினு
மண்டுமென்பின் யாதானும் வைத்துக் கொண்
டுண்டு பாரெனூட்டு நீரரே"

எனப் பெண்கள் தத்தம் கணவற்காற்ற வேண்டிய கடன்களையும், அன்னாரின் நீர்மையையும் அருளினர். ஆகலின் மேற் கூறப் பெற்ற குணமெலாம் பெண்டிருக்குக் கல்வி யிருந்தாலொழிய அமையா. கல்வியே இவ்வருங் குணங்களை யளிக்க வல்லது. ஆகவே ஆடவரும் பெண்டிரும் இல்லறத்தை நல்லறமாய் நடத்தக் கல்வியைக் கடைப் பிடித் தொழுகல் வேண்டும். இதுபற்றியே, பெரியோர்கள் தம்பதிகளின் இலக்கணத்தைச் சாற்று மிடத்து "தலைவன் தலைவியர் ஒத்த கல்வியுடையரா யிருத்தல் வேண்டும்" என அருளினர்.

இனி மக்கள் இறுதியில் எய்தற்குரிய பேரின்பநிலைக்கும் இக்கல்வி இன்றியமையாது வேண்டற்பாலதா? என்று ஒரு சிறிது ஊன்றி ஆராய்வோம். பெட்புறு பேரின்ப நிலையைப் பெறுதற்குரிய பெரு நெறியிற் செல்ல, 'கல்வி' என்னும் ஊன்றுகோலொன்றுவேண்டும். இல்லையேல், கல்வியிலா மகன் செந்நெறியிற்சருகிவெந்நெறியில் வீழ்வனெனவிளம்பவும் வேண்டுமோ? கருணைக் கடலாகிய கடவுளைக்காணும் நெறிகள் பலப் பல. அந்நெறி பல வற்றினுள் மக்கள், சுலபமாய் அடையக் கூடிய செந்நெறியாது? அந்நெறிக்கண் எதன் துணை கொண்டு செல்லல்வேண்டும் என்ற இன்னோரன்ன விடயங்களையறிய மக்களுக்கு, மெய்யறிவு வேண்டற்பாலது. அம்மெய்யறிவும் கல்வியினாலே வருந்தன்மையது. ஒருவனின் மெய்யறிவு அன்னான் கற்றகல்விக்குத்தகவே வளர்கிறது. இவ்வுண்மை யுணர்ந்த வள்ளுவர், "தொட்டனைத் தூறுமணற்கேணிமாந்தற்குக் கற்றனைத்தூறுமறிவு" எனவழுத்துவாராயினர். ஆகலின் தற்பரனைக் காணுந் தனிப்பெரு நெறியைக்காண மக்களுக்கு மெய்யுணர்வு வேண்டற்பாலதானும், அம்மெய்யுணர்வு கல்வியா லெய்தற் பாலதானும் 'கல்வி'யே வீட்டையும்பயக்குந்தன்மையது. இதனை,

"சற்பக்கழிமட மஃகுமட மஃகப்
புற்கந்தீர்ந் திவ்வுலகிற் கோளுணர்ந்தால்
தத்துவமான நெறிபடருமன்னெறி
இப்பா லுலகத்திசை நிறீஇயுப்பால்
உயர்ந்த வுலகம் புகும்"

என்று நான் மணிக்கடிகை யார் நன்கு நவில்வதை ஓர்க. ஆகவே கல்வியிலா வொருவன் கடவுளைக்காணும் நெறியை அறியவொண்ணாது கலங்கிப் பிறவியின் பயனையிழக்கிறான். இவ்வுண்மையை,

"எல்லாவுயிர்க்கு மிறைவனேயாயினும்
கல்லாதார் நெஞ்சத்துக்காண வொண்
ணாதே"

என்று திருமந்திரமும்,

"கற்றவர்விழுங்குங் கற்பகக்கனியைக்
கரையிலாக் கருணைமாகடலை"

என்று திருவிசைப்பாவுஞ் செப்புவனவாயின.

இதுகாறுங்கூறிய வற்றால், இம்மைப் பயன்களைப் பெறவே இம்மனித யாக்கையைப் பெற்ற மக்களுக்குக் 'கல்வி' எனும் பொருள்இன்றியமையாததொன்று என்று புலனாயிற்று.

(தொடரும்)

## லஜபதியின் பிரிவாற்றாமை

(ஆசிரியப்பா)

நந்தம் பாரத நற்றாய் வயிற்றில் - அந்தமில்
புகழொடு அருளே யுருவாய் - அறனே
நெறியாய் ஆண்மையே யுண்மையாய் -
திறனே மிக்க தீர நாயகராய் - தோன்றிற்
புகழொடு தோன்றுகவெனுஞ் சொற்-கிணங்
கப் பிறந்த இனியலா லாவோ! பாஞ்சால
வாசா! பதியழகேசா! - பஞ்சச் சிங்கமே!
வஞ்சித்தே நீ! - எங்கோ பாய்ந்தனை! எங்ஙனம் மாய்ந்தனை! - சிங்க முழக்கே! சிங்கார
மணியே-நின் ஒலி எங்கே! நின் ஒளி எங்கே!
அன்னை பாரதியே! அருமருந்தனைய நின்
மைந்தனை யிழக்க மனந்துணிந்தனை கொல்!
நந்தாய் நாட்டின் நற்பயனுக்காப் - பிறந்த
முதலாய் இறக்குந் தனையும் - இரத்தம் -
சிந்திய இந்திய வீரருள் - இவர்தாம் அன்றோ
எய்தாப் பெரியார்! எவர்தம் மாலும் எத்தப்
படுவோர் - கள்ளமென்பதைக் கனவிலும்
கருதா - உள்ளம் படைத்த வள்ளலாரே!
அறுபான் ஆண்டுகட் கதிகம் ஆகியும் - ஏறு
போல் வீறுடை ஏந்தலே யாண்டுளாய்;
தேசபக்தருள் தீதிலாத் திலகமே! - மாசில்
ஞானம் வாய்க்கப்பெற்றோய்! - பொய்யுடம்
பதனைப் புவியின் நகற்றி - மெய்யுடம்
பதனை மேன்மை யாயடைந்த - சீரிய செல்
வச்சீலாவோ லாலாவோ! - காரியக்கண்ணு!
காழ்ப்போ எம்மீது? - உற்ற காலத்தே உறு
துணையிழக்கும் - பெற்றி வாய்ந்த பாரத
நாடு நின் - சொற்றிறன் றனையும் செயற்றி
றன்றனையும் - மறக்குங் கொல்லோ! மறக்
குங் கொல்லோ! - அறுபான் ஆண்டிலும்;
ஆரே நின்போல் - வீரர் முன்னின்று வீரி
யம் காட்டிப் - பாரோர் புகழப் பாரை நீத்
தோர் - ஆதலின் அன்றோ சாதலில் வென்
றனை - ஏதமில் புகழை எய்தாய் எந்தாய்! -
நின்புகழ் தன்னை நீடூழி நிலவ - இன்னருள்
சுரக்கஇறைவன் - இணையடிமலரை இறைஞ்
சுவமே!

P. S. அரங்க நாயகி அம்மாள்,
பூளைமேடு.

---

சமீபத்தில் திருவண்ணாமலையில் நடந்த சர்க்கஸ் ஒன்றில் வேடிக்கை பார்க்கச் சென்ற ஒரு கிறிஸ்தவப்பெண் சிறுத்தைக் கூண்டினருகில் நின்றுகொண்டிருந்தாளாம். அப்போது அச்சிறுத்தை கம்பியின்வழியாகத் தன்கையைவிட்டுப்பெண்ணின் தலைமயிரைப் பிடித்து இழுத்ததாம். சிறிது நேரம் பெண் தைரியமாகச் சிறுத்தையின் கையினின்றும் விடுபட முயன்றும் பயனில்லாமல் போகவே கடைசியில் கூச்சலிட்டாளாம். உடனே மிருகக்காவலாளர் ஒருவர் ஓடிவந்து சிறுத்தையைச்சலாகையால் குத்திச் சிறுமியைக் காப்பாற்றினாராம்.

# உலகக் காட்சி

## மதுவிலக்குச் செய்த குரங்கு

பல்லார்ட்என்ற பிரபுவிடம் ஜாக் என்னும் பெயருடைய ஒரு குரங்கு இருந்தது. அப்பிரபு செல்லுமிடங்களுக்கெல்லாம் அப்பிராணியைத் தம்முடன் அழைத்துச்செல்லுவது வழக்கம். ஒருநாள் அவரும் அவருடைய நண்பர்களும் உல்லாசமாக மதுபானம் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது குரங்கின் நினைவு வரவே, அருகேயிருந்த அப்பிராணிக்கு அந்த நண்பர்களில் ஒருவர் விளையாட்டாகக் கொஞ்சம் மது குடிக்கக் கொடுத்தார். குரங்கு அதைக் குடித்து, வெறிகொண்டு அங்கு மிங்கும் ஓடி ஆட ஆரம்பித்தது. இவ்வாடலைப் பிரபுவும் அவர் நண்பர்களும் கண்டு களித்தார்கள். அந்நண்பர்கள் மறுநாளும் இப்படி ஆடச் செய்யக் குரங்கைத் தேடிக்கொண்டு பிரபுவின் வீட்டை அடைந்தார்கள். வானரம் உள்ளறையின் மூலையொன்றில் பதுங்கியிருந்தது. எஜமானன் கூப்பிடவே தலையைப் பிடித்துக்கொண்டு வெளியே வந்தது. குடியினால் அதற்குத் தலைவலி உண்டாகிவிட்டது போலும்! இப்போதும் அக் குடிகார நண்பர்கள் ஒரு பாத்திரத்தில் சாராயத்தை ஊற்றி அதன்முன் வைத்தார்கள். அவ்வானரம் அதைக் குடிக்கவேயில்லை. எஜமானர் பயமுறுத்தியும் மதுவைத் தொடவேயில்லை. பின்னர் அவ்வானரம் தன் எஜமானருடன் ஜீவித்திருந்த 12 - ஆண்டு காலத்தில் ஒருமுறையேனும் மதுவருந்த ஒப்பவில்லையாம்.

* * *

## பாட்டினால் பத்தினி அடைதல்

நேபாளதேசத்தில் வசிக்கும் 'லேம்பு' என்னும் வகுப்பினரின் கலியாண நடைமுறைகள் மிக விநோதமானவையாம். இந்தச் சாதியினரில் கலியாணம் செய்து கொள்ள விரும்பும் ஆண் மகனும் பெண் மகளும் ஓரிடத்தில் சந்தித்துப் பாட்டினாலேயே தர்க்கம் செய்யவேண்டும். ஒருவர் பாடிய பாட்டிற்கு மற்றொருவர் தக்க பதில் பாட்டின் மூலமாகச் சொல்ல வேண்டும். இறுதியில் அவ்வாடவன் தன சாமர்த்தியத்தினால் பாட்டுப் பாடி, எவ்விதத்திலாவது அந்தப் பெண்ணைப் பதிலிறுக்க முடியாமல் தோற்கச் செய்ய வேண்டும். அதன் பிறகே அப்பெண்ணை அவ்வாண் மகன் மணம் புரியலாம். அங்ஙனமன்றிப் பெண் ஜெயித்து விட்டால், ஆண் ஓட வேண்டியதுதான். அப்படிப் பெண்ணை வெற்றி கொண்ட வாலிபன் முதன் முதலில் தன் மாமனுக்கு ஒரு பன்றியைக் கொன்று அதன் உடலைப் பரிசாக அனுப்புதல் வேண்டும். கலியாணம் நடந்து பெண் திரும்பித் தங்கள் வீட்டுக்கு வருமளவரையில் பெண்ணின் பெற்றோர்க்குக் கலியாணத்தைக் குறித்து ஒன்றுமே தெரியாது. சில நாட்களுக்குப் பிறகு மத்தியஸ்தர்கள் சிலர் பெண்ணின் பெற்றோர்க்குக் கலியாணம் நடந்த செய்தியைத் தெரிவிப்பதுடன், ஒரு புட்டி சாராயம், கொன்ற பன்றி, ஒரு ரூபா இவைகளைக் கொடுத்துக் கலியாணத்தை அங்கீகரிக்க வேண்டுவார்கள். முதலில் அவர்கள் சம்மதியாததுபோல் நடித்துக் கடைசியில் சம்மதித்து விடுவார்கள்.

* * *

## உலகில் பெரிய கிழவர்

துருக்கி தேசத்தைச் சேர்ந்த ஸோரா ஆகா என்பவர் இதுகாறும் "உலகில் பெரிய கிழவர்" என்னும் பட்டத்தை வகித்து வந்தார். இப்போது அவருக்குப் போட்டியாக மலாக்கா நாட்டில் ஒருவர் முளைத்திருக்கிறார். இவர் பெயர் ஹாஜி யூசப். இவருக்கு இப்போது 170 வயதாகிறதாம். குருபாங் என்னுமிடத்தில் இவர் வசிக்கிறாரென்று "மலாக்கா டிரிப்யூன்" பத்திரிகையின் நிருபர் தெரிவிக்கிறார். இவரைச் சென்று பார்த்துவந்த மேற்படி நிருபர் மேலும் கூறுவதாவது:—"மலாய் நாட்டார் பலரையும் போல ஹாஜி யூசப்பும் விருந்தினரை உபசரிப்பதில் அதிக ஆசைகொண்டவர். என்னைப் பார்த்ததும் வாசலுக்கு வந்தார். அவருடைய மன உறுதியும் தேகக்கட்டும் இன்னும் தளரவில்லை. காதும் நன்றாகக் கேட்டுவருகிறது. தமக்கு 170 வயதாகிறதென்றும், தாம் 36 முறை விவாகஞ் செய்து கொண்டதாகவும், 60 குழந்தைகள் பிறந்ததில் 26 பேர் தற்போது உயிரோடிருப்பதாகவும், தமது தகப்பனார் 300 வருஷ காலம் ஜீவித்திருந்தாரென்றும் அவர் கூறினார். அவர் தந்தை மாந்திரீக சக்தி வாய்ந்தவராம். தம் தந்தைக்குத் தாம் ஒன்பதாவது புதல்வர் என்றும், சென்ற 70 வருஷமாய்த் தாம் மலாய் நாட்டில் வசித்து வருவதாகவும் அவர் தெரிவித்தார். தம் தகப்பனாரைப் போலவே தாமும் 300 வருஷம் உயிர்வாழக் கூடுமென்று அவர் நம்புகிறார்."

# சர்வஜன வாக்குரிமை

ஸ்ரீவான் கே. எஸ். முத்துசுவாமி ஐயர் எழுதுவது :—

சர்வகக்ஷி மகாநாட்டின் அறிக்கையை தேசாபிமானிகள் ஊன்றி ஊன்றிப் படிக்க வேண்டும். அரிய பெரிய விஷயங்கள் அழகிய சொற்களடங்கிய சில அருமையான வாக்கியங்களில் பொருந்தி நிற்கின்றன. மிகத்தேர்ச்சி பெற்ற டாக்டர் பெஸண்டு அம்மாள் தாம் பல மாதங்களாய் அனேக மேதாவிகளின் உதவியுடன் தயாரித்த, இந்திய சாம்ராஜ்ய யாதாஸ்தைக் கூட வாபீஸ் வாங்கிக் கொள்வதாகச் சொல்கின்றார். அவர் எவ்விதத்திலும் ஏமாறக் கூடியவரல்லர். தமது கொள்கைகளைப் பல முறைகளிலும் ஆதரிக்கும் ஆவல் உடையவர். அவ்வம்மையாரே சர்வ கக்ஷி அறிக்கையை மெச்சி, அதன் அம்சங்களைப் பிரசாரஞ் செய்யத் தீவிர முயற்சிஎடுத்துக்கொள்ளுதல், சர்வகக்ஷி மகாநாட்டின் அறிக்கையின் பெருமையை வெளிப்படுத்துகிறதல்லவா?

அவ்வறிக்கையில் மூன்றுவிஷயங்கள் எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. (1) இந்தியாவிற்கு ஆஸ்திரேலியா, கானடா, தென்னாப்பிரிக்காவைப்போன்ற அந்தஸ்துள்ள உரிமை கிடைக்க வேண்டுமென்பது. (2) இந்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்களின் அமைப்பு, சட்ட நிரூபண சபைகளின் பொறுப்பு, அச்சபைகளை ஏற்படுத்தும் உபாயங்கள் (3) சுதேச ராஜாக்களுக்கும், இந்திய அரசாங்கத்துக்கும் உள்ள சம்பந்தம் இவைகளைத்தவிர பல ஜாதியினர், மதத்தினர் இந்நாட்டிலிருப்பதால் எல்லோரும் சமாதானமாயிருக்கும்பொருட்டு முதற் பீடிகையாக சில சாசுவத உறுதி மொழிகளைப் பகிரங்கமாய் ஒப்புக்கொள்ளல் என்றவிஷயமும் அடங்கியிருக்கிறது. இரண்டாவதாகச்சொல்லப்பட்டிருக்கும் அரசாங்க சட்ட நிரூபண சபை அமைப்புகளைப்பற்றிச் சொல்லியிருப்பதில் இரண்டு மகத்தான அம்சங்கள் கவனிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:— (1) மாகாண சட்ட நிரூபண சபை நடவடிக்கை தேசபாஷையில் நடைபெறல்வேண்டும் (2) 21 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் யாவரும் வாக்களிக்கும் சுதந்திரம் பெற வேண்டும்.

கடைசியாகச் சொல்லப்பட்ட விஷயத்தை முதலாவதாக நாம் எடுத்து ஆராய்வோம். இப்புதுப் பிரேரபணையின் பெருமையை அறியத் தற்கால நிலைமையை நாம் நன்கறியவேண்டும். சட்டசபை வாக்காளர் ஜாப்தாவை நன்றாய்க்கவனியுங்கள். (1) 31 கோடி ஜனங்களில் 8 கோடி மைனர்களை நீக்கி 23 கோடி நல்ல வயதுள்ள ஆண் பெண்களில் 60 லக்ஷம் பேர்களே வாக்காளர்கள். (2) இவர்களில் சிலர் அனேக சங்கங்களிற் சேர்ந்து அவைகளின் மூலமாயும் தங் செல்வாக்கை உபயோகப்படுத்துகின்றனர். உதாரணமாக ஜமீன்தார் என்ற ஹோதாவில் நிலஸ்வான் தொகுதியில் வாக்காளர், பி. ஏ. பட்டதாரி என்ற ஹோதாவில் சர்வகலா சங்கத்தொகுதியில் வாக்காளர், வியாபாரி என்ற ஹோதாவில் வியாபாரச்சங்கத் தொகுதியில் வாக்காளர், இவ்விதம் அவரது செல்வாக்குப் பலதுறைகளிலும் செல்வதால் பிரதிநிதிகள், பிற வாக்காளர்கள் இவர்களின் மனப்பான்மை இச்சிறு இனத்தாரின் அபிப்பிராயத்தை ஒட்டி நிற்கின்றது. (3) நிலஸ்வான்கள், அதிகமாதச் சம்பளமுள்ளவர்கள், சில பெரிய வியாபாரிகள், வக்கீல்களே வாக்காளர்கள். இவ்விதத் தொகுதியினர் எந்நாட்டிலும் எக்காலத்திலும் பரந்த கம்பீர நோக்கத்துடன் திரிகாலத்தையும் ஆழ்ந்து அறிந்து சர்வஜன க்ஷேமத்தைக் கருதி நடந்ததாகத் தெரியவில்லை. ஆங்காங்கே அவர்களிற் சிலரைத் தனித்தெடுக்கக் கூடுமாயினும் அவர்கள் வாய்ப்பேச்சு வீணாகின்றது. அவர்களைப் பொருட்படுத்துவோர் அச்சபையில் மிகச் சிலரே. (4) வியாபாரத் தொகுதி, நிலஸ்வான் தொகுதி, ஜமீன்தார் தொகுதி, பட்டணத் தொகுதி, நாட்டுப்புறத் தொகுதி, கிறிஸ்துவர் தொகுதி, மகம்மதியர்தொகுதி, சர்வகலாசங்கத்தொகுதி எனப் பலவகைப்பட்ட தொகுதிகள் ஏற்பட்டிருக்கின்றன.

சட்டசபை அங்கத்தினரின் தன்மையை நன்றாய்க் கவனியுங்கள். 1920 லிருந்து 1928வரையுள்ள அங்கத்தவர்களின் பொது நோக்கங்களையும் ஒற்றுமை வேற்றுமைகளையும் விவகாரங்களையும் உற்று நோக்குங்கள். அங்கத்தினரில் பெரும்பான்மையோர் பட்டண வாசிகள். விவசாயம் முதலிய தொழில்களின் லாபத்தை உறிஞ்சுபவர்கள். அவைகளிலுள்ள கஷ்டங்களை உணராதவர்கள். அவைகளைத்தெரிந்து நடக்கவேண்டிய பொறுப்பும் அவர்களுக்கு வேண்டாம்.

(தொடரும்)

Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

